# அம்ருதா

**Amrudha Tamil Monthly**

Volume 18 Issue 2 September 2023 Rs.25
ஆண்டு 18 இதழ் 2 செப்டம்பர் 2023 ரூ.25
















## இந்திய அரசியமைப்பின் அடிப்படைக்கு ஆபத்து

பிரபு திலக்

## ஹூலியோ கொர்த்தஸார் சிறுகதை

தமிழில்: சமயவேல்

## மிஷ்கின் என்னும் பைத்தியக்காரன்

சு.கஜன்

ஆண்டு 18 இதழ் 2

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

செப்டம்பர்-2023 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: சந்ரு
மனநலம்: டாக்டர் மா. திருநாவுக்கரசு
வரலாறு: பொ. வேல்சாமி
மொழிபெயர்ப்பு: நாகரத்தினம் கிருஷ்ணா
திரைப்படம்: விட்டல்ராவ்
கல்வி: பேரா. தியாகராஜன்
அறிவியல்: பத்ரி சேஷாத்ரி
இலக்கியம்: தேவேந்திரபூபதி
நாடகம்: அ. ராமசாமி
ஊடகம்: இளைய அப்துல்லாஹ்
சூழலியல்: மோகன்ராம்
இசை: ரவிசுப்பிரமணியன்
விளையாட்டு: ஆர். அபிலாஷ்
தற்கால நிகழ்வுகள்: செ. சண்முகசுந்தரம்
அரசியல்: மருதன்

வடிவமைப்பு: பிரபாகரன்

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# இந்திய அரசியமைப்பின் அடிப்படைக்கு ஆபத்து!

பிரபு திலக்

இந்தியாவில் மிக உயரிய சுயாட்சியான அமைப்புகளில் ஒன்றாக தேர்தல் ஆணையமும் உள்ளது. பிரதமரை தேர்வு செய்யும் பாராளுமன்ற தேர்தல், மாநிலங்களின் முதலமைச்சர்களை தேர்வு செய்யும் சட்டசபை தேர்தல்கள், குடியரசு தலைவர் தேர்தல், துணை குடியரசு தலைவர் தேர்தல் மற்றும் மாநிலங்களவை உறுப்பினர்கள் தேர்தல் ஆகியவற்றை தேர்தல் ஆணையம்தான் நடத்துகிறது. இந்த தேர்தல்களை அறிவிப்பது தொடங்கி, முடிவுகளை அறிவித்து, வெற்றிபெற்றவர்களுக்கு சான்றிதழ் வழங்குவது வரை அனைத்தையும் தேர்தல் ஆணையமே செய்கிறது.

இந்திய அரசியலமைப்பின் விதிகளின்படி ஜனவரி 25, 1950 அன்று தேர்தல் ஆணையம் நிறுவப்பட்டது. நாட்டில் நியாயமான, நேர்மையான தேர்தல் நடைபெறுவதை உறுதிப்படுத்திட அரசியலமைப்பால் நேரடியாக உருவாக்கப்பட்ட நிரந்தரமான, சுயாட்சியான அமைப்பு தேர்தல் ஆணையம்.

ஆனால், தேர்தல் ஆணையர் நியமனத்தில் முடிவுகளை இத்தனை காலம் மத்திய அரசுதான் எடுத்து வந்தது. மத்திய அமைச்சரவையின் ஆலோசனை மற்றும் வழிகாட்டுதலின் படி குடியரசுத் தலைவரால் தேர்தல் ஆணையர்கள் நியமிக்கப்பட்டார்கள். இதனால், தேர்தல் ஆணையம் ஆளும் அரசுக்கு சார்பாக நடந்துகொள்வதாக அவ்வப்போது எதிர்க்கட்சிகளால் விமர்சனங்களும் முன் வைக்கப்பட்டு வந்தன.



இந்நிலையில், தலைமை தேர்தல் ஆணையர், தேர்தல் ஆணையர்களை நியமிக்கும் அதிகாரம் மத்திய அரசிடம் இருப்பதை மாற்றக் கோரி, ஜனநாயக சீர்திருத்தங்களுக்கான சங்கம் (ஏடிஆர்) என்ற தொண்டு நிறுவனம் சார்பில் உச்ச நீதிமன்றத்தில் கடந்த ஆண்டு வழக்கு தொடரப்பட்டது.

இந்த வழக்கு விசாரணையில் இருக்கும்போது நியமிக்கப்பட்ட தேர்தல் ஆணையர் அருண் கோயலின் நியமனமும் சர்ச்சைக்குள்ளானது. இதனையடுத்து, அருண் கோயல் நியமனத்தை எதிர்த்தும் ஏடிஆர் தொண்டு நிறுவனம் உச்ச நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்தது. “மத்திய அரசின் செயலாளராக பதவி வகித்த அருண் கோயல் கடந்த ஆண்டு நவம்பர் 18ஆம் தேதி விருப்ப ஓய்வு பெற்றார். அடுத்த நாளே மின்னல் வேகத்தில் அவர் தேர்தல் ஆணையராக நியமிக்கப்பட்டார். அவரது நியமனத்தில் பல்வேறு சட்ட விதிகள் மீறப்பட்டுள்ளன. தேர்தல் ஆணையராக அருண் கோயல் நியமிக்கப்பட்டது செல்லாது என அறிவிக்க வேண்டும்” என்று அந்த மனுவில் கோரப்பட்டு இருந்தது. பின்னர் அந்த மனு உச்ச நீதிமன்றத்தால் தள்ளுபடி செய்யப்பட்டது.

அதேநேரம், தேர்தல் ஆணையர் நியமனம் தொடர்பான முந்தைய வழக்கில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தீர்ப்பை உச்ச நீதிமன்றம் வழங்கியது. இந்த வழக்கில் வாதாடிய மூத்த வழக்கறிஞர்கள் பிரசாந்த் பூஷன், காலீஸ்வரம் ராஜ், “தலைமைத் தேர்தல் ஆணையர் மற்றும் தேர்தல் ஆணையர்களை நியமிக்கும் முழு அதிகாரம்




மத்திய அரசின் வசம் உள்ளதை மாற்ற வேண்டும். சிபிஐ இயக்குநரை பிரதமர், எதிர்க்கட்சித் தலைவர், உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி ஆகியோர் தேர்வு செய்கிறார்கள். இதேபோல் தலைமைத் தேர்தல் ஆணையர் மற்றும் தேர்தல் ஆணையர்களை தேர்வு செய்ய வேண்டும்" என கோரியிருந்தனர்.

இதற்கு மத்திய அரசு தரப்பில் கடுமையாக எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. "தலைமைத் தேர்தல் ஆணையர் மற்றும் தேர்தல் ஆணையர்களை நியமிப்பது அரசின் நிர்வாகச் செயல்பாட்டின் ஓர் அங்கம். தேர்தல் ஆணையராக சுதந்திரமாக செயல்பட்டவர் என்ற பெயரை பெற்றவர் டி.என். சேஷன். அவரை நியமித்தது அரசுதான்" என்று கூறியது.

மற்றொரு மனுதாரரான அஸ்வினி உபாத்யாய தரப்பில் ஆஜரான வழக்கறிஞர் கோபால் சங்கரநாராயணன், "தேர்தல் ஆணையர்களை நியமிக்க தனி செயலகம் இருக்க வேண்டும். நாட்டின் ஒருங்கிணைந்த நிதியில் இருந்து அவர்களுக்கு ஊதியம் வழங்கப்பட வேண்டும்" என வலியுறுத்தினார்.

அனைத்து தரப்பு வாதங்களையும் கேட்ட, கே.எம். ஜோசப் தலைமையிலான 5 நீதிபதிகள் கொண்ட அரசியல் சாசன அமர்வு, 2 மார்ச் 23 அன்று அளித்த தீர்ப்பில், "பிரதமர், எதிர்க்கட்சித் தலைவர், உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதி ஆகியோர் அடங்கிய குழுவின் பரிந்துரையின்படி தலைமைத் தேர்தல் ஆணையர் மற்றும் தேர்தல் ஆணையர்களை குடியரசுத் தலைவர் நியமிக்க வேண்டும். இதற்கேற்ப நாடாளுமன்றத்தில் சட்டம் இயற்ற வேண்டும். மேலும், தேர்தல் ஆணையத்தின் செலவினங்களை கையாள்வதற்கு தனியான சுதந்திரமான செயலகம் அமைக்கப்பட வேண்டும். இதற்கான நடவடிக்கைகளை நாடாளுமன்றமும் மத்திய அரசும் எடுக்க வேண்டும்" என்று தீர்ப்பளித்தது.

இந்த தீர்ப்பை நீர்த்து போகச் செய்யும் வகையில், தற்போது, உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதிக்கு மாற்றாக கேபினெட் அமைச்சர் ஒருவர் தேர்வுக் குழுவில் இடம் பெறுவதற்கு ஏற்ப, Chief Election Commissioner and other Election Commissioners (Appointment Conditions of Service and Term of Office) Bill, 2023 என்ற பெயரிலான சட்ட திருத்த மசோதா ஒன்றை மத்திய அரசு தயாரித்துள்ளது.

இந்த மசோதா படி, தேர்தல் ஆணையர் தேர்வுக் குழுவில் தலைமை நீதிபதியோ அல்லது வேறு நீதிபதியோ இடம்பெற மாட்டார்கள். மாறாக, தேர்வுக் குழு தலைவராக பிரதமர், தேர்வுகுழ உறுப்பினர்களாக எதிர்க்கட்சித் தலைவரும் மத்திய அமைச்சர் ஒருவரும் இடம்பெறுவார்கள். இவர்கள் அடங்கிய குழுதான் தலைமைத் தேர்தல் ஆணையர் மற்றும் பிற தேர்தல் ஆணையர்களை தேர்வு செய்யும். இவர்களின் பரிந்துரையை குடியரசுத் தலைவர் ஏற்பார்.

தேர்தல் ஆணையர் அனுப் சந்திர பாண்டே அடுத்த ஆண்டு பிப்ரவரி 14ஆம் தேதி ஓய்வு பெற இருக்கிறார். அதையடுத்து, தேர்தல் ஆணையர்

தொடர்ச்சி 52ஆம் பக்கம்

# மிஷ்கின் என்னும் பைத்தியக்காரன்

சு. கஜன்

சினிமாவில் இரண்டு வகையினர் உண்டு. ஒன்று சினிமாவை பயன்படுத்துபவர்கள்,இரண்டாவது சினிமாவுக்கு பயன்படுபவர்கள். மிஷ்கின் இரண்டாவது வகை. அதற்காக மிஷ்கின் படைப்புகள் எல்லாம் கலைப் படைப்புகள் என்று அர்த்தமல்ல. சிறப்பான திரைக்கதை, இசை, ஒலி அமைப்பு, காட்சிக் கோணம் என பல தளங்களில் அவரது நுணுக்கம் வெளிப்படுகிறது. வணிக சமரசத்திற்கான காட்சிகள் உண்டு என்ற போதிலும், அதிகபட்சம் கலையை பயன்படுத்தக்கூடிய இடங்களிலெல்லாம் பயன்படுத்துகிறார்.

அண்மையில் வெளிவந்த 'கடைசி விவசாயி' திரைப்படத்தை மக்கள் அனைவரும் கட்டாயம் திரையரங்குகளில் சென்று பார்க்க வேண்டும் எனக் கோரிக்கை விடுத்ததும் அதன் இயக்குநர் மணிகண்டனை தானே நேரில் சென்று சந்தித்தமையும் மிஷ்கினின் சினிமா மீதான தீராக் காதலின் வெளிப்பாடுதான். தமிழ் சினிமாவின் எந்த பிரமாண்ட அல்லது பிரபல இயக்குநர்களும் இவ்வாறு செய்வதில்லை.

மிஷ்கின் திரைப்படம் ஒவ்வொன்றிலும் கவித்துவமான, ஜென் தன்மை கொண்ட காட்சிகள், ஆழ்ந்த உண்மைகளை எளிமையாக வெளிப்படுத்தும் உரையாடல்கள் என ஒரு விதமான முழுமை காணப்படுகிறது. மிஷ்கினின் திரைப்படங்கள் ரசிக்கத்தக்க ஜென் தருணங்களைக் கொண்டவையாக இருப்பதற்கு, அவர் அவர் ஜப்பானிய ஹைக்கூவின் பெரிய ரசிகன் என்பதும் ஒரு காரணம்.

ஜென் கதையில் ஒருவர் இருட்டினுள் தொலைத்த சாவியை வெளிச்சத்தினுள் தேடுவார். அதைப் போல, 'யுத்தம் செய்' படத்தில் கதாநாயகன் தனது காணாமல் போன சகோதரியை தேடி, அவளைக் கடைசியாகப் பார்த்த தெருவிளக்கின் கீழ் ஒவ்வொரு இரவையும் கழிக்கிறான். கதாநாயகன் தவறான இடத்தில் தேடிக் கொண்டிருக்கிறான் என்ற ஜென் கதையின் வெளிப்பாடுதான் அது.



ஒரு ஓவியன் காட்சிகளின் மூலமாகவே தனது கருத்தை வெளிப்படுத்துகிறான், வார்த்தைகளுக்கு அங்கு இடமில்லை. அதேபோல் ஓவியங்கள் மீது அதிக ஈடுபாடு கொண்ட, காட்சிகளின் மூலமாகவே சிந்திக்கும் தன்மை கொண்ட மிஷ்கின், தான் சொல்ல வந்ததை குறைந்த வசனத்துடன் அதிக வீரியத்துடன் காட்சிகளின் மூலமாகவே பார்வையாளனுக்கு கடத்தி விடுகிறார். அந்த வகையில் 'முகமூடி' திரைப்படம் அழகியல்தன்மை அதிகம் கொண்ட ஒருதிரைப்படம். (ஆனால்,கதையில் கவனத்தை சிதறவிட்டுவிட்டதால் படைப்பு ரீதியாகவும் வியாபார ரீதியாகவும் அது தோல்வியை தழுவியது.)

மிஷ்கினின் படங்களில் அடிநாதமாக இழையோடிக் காணப்படும் மனித நேயம், பிரச்சார நோக்கில் வலிந்து திணித்தது போல் இல்லாமல், கதையோடு ஒன்றி கவித்துவமாகவும் தனித்துவமாகவும் காணப்படுவது கவனிக்க வேண்டியது. தன்னை காயப்படுத்திய குடிகாரனைக் கூட வைத்தியசாலையில் சேர்க்கும் சித்தார்த்தின் அம்மா, பிச்சைக்காரர்களுக்கு சித்தார்த் செய்யும் உதவி, பவானியின் தந்தைக்கு சித்தார்த் செய்யும் உதவி, வோல்(f) எட்வார்ட்டாக மாறி அவனின் குடும்பத்தைக் காப்பாற்றுதல் என பல உதாரணங்கள் உள்ளன.

பேய், பிசாசு என்றால் வன்முறை, ஆபாசம், மட்டமான காமெடிகள்,பழி வாங்கும் குணம்,இரத்தம் குடிக்கும் காட்டேரி என சென்றுகொண்டிருந்த தமிழ் சினிமாவில் பிசாசை ஒரு அன்பின் குறியீடாக, தேவதையாக காட்டியவர் மிஸ்கின். பேய் என்றால் என்ன என்ற கேள்விக்கு, எந்த ஒரு அதீத உணர்வும் பேய்தான் என்கிறார் மிஸ்கின். பேய் என்னும் அதீத உணர்வு, சினிமா என்னும் வடிவில் மிஷ்கினுள் இருப்பதனாலேயே அவரது திரைப்படங்கள் ரசனை மிகுந்த சினிமாவாக காணப்படுகின்றது.

பல பிரபல இயக்குநர்கள் கூட திருநங்கைகளை கேலிப் பொருளாக்கி மிக மோசமாகவே சித்தரித்துக் கொண்டிருந்த வேளை, சமூகம் ஒதுக்கிய திருநங்கைகளும் எங்களை போன்ற மனிதர்கள்தான், அவர்களுக்கும் உணர்வு உண்டு என எடுத்துக்காட்டியவர் மிஷ்கின்.

இதுபோல் யதார்த்த உலகை சந்திக்க



முடியாமல் தயங்குகிறவர்களுக்கும் ஒரு இடத்தை தனது படத்திலே ஆங்காங்கே கொடுத்துவிடுகிறார். அதாவது, பிச்சைக்காரர்கள், பாலியல் தொழிலாளர்கள் போன்ற இச்சமூகம் ஒதுக்கிய நபர்களுக்கும் வாழ்வு உண்டு என்பதை படங்களில் பதிவு செய்யத் தவறுவதில்லை.

'துப்பறிவாளன்' படத்தில் பார்வையாளர்களுக்கு விறுவிறுப்பை ஏற்படுத்துவதற்காக ஒரு பிரபல நடிகரைக் காணவில்லை என்றோ அல்லது ஏதோ ஒரு பிரமாண்ட பொருளைக் காணவில்லை என்றோ முதல் காட்சியை அமைத்திருக்க முடியும். ஆனால், நாய்க்குட்டியைக் காணவில்லை என்றே அதன் முதல் காட்சியை அமைக்கிறார். ஒரு எளிய எண்ணத்தை மிகப்பெரும் கருத்துருவாக மாற்றுவதும் அதை மக்கள் கொண்டாடும் படைப்பாக மாற்றுவதும் ஒரு படைப்பாளியின் முக்கிய திறனாகும். மிஷ்கின், எளிய விடயங்கள் மூலம் மக்கள் மனதைத் தொடும் ரஸவாதிதான் என்பதை இதில் நிருபிக்கிறார்.

செயற்கைத்தன்மையான உடல் மொழி, இருண்ட காட்சிகள், கால் ஷாட், வன்முறை போன்றவை மிஷ்கின் படங்களில் பொதுவாகக் காணப்படும் அம்சம். இதற்காக அவர் விமர்சிக்கவும் படுகிறார். ஆனால், அதையும் தாண்டி மிஷ்கின் படங்களில் காணப்படும் கதை நரம்பு பேரன்பு, கருணை, மனிதம்.

அன்புதான் ஆதி, அதுதான் தாய். எனவே, அதற்கு முக்கியத்துவம் கொடுக்கக்கூடிய கதைகளைச் சொல்லிக்கொண்டே இருப்பதுதான் தனது பாணி என மிஷ்கின் நம்புகிறார் என தோன்றுகிறது. இயேசு, புத்தர், முகம்மது என அனைவரும் அன்பைத்தான் போதித்தனர். தானும் தனது படங்களின் மூலம் அதே அன்பை போதிக்க வேண்டும் என நினைக்கலாம். ஒரு குழந்தையிடம் காணப்படும் அன்பு, கடவுளிடம் உள்ள கருணை - இதனையே தனது படைப்புகளில் மிஷ்கின் வெளிப்படுத்துவது குறிப்பிடத்தக்கது.

மிஷ்கின் அரசியல் சார்பான படம் எடுப்பதில்லை என்பது பரவலாக அவர் மீது வைக்கப்படும் இன்னொரு குற்றச்சாட்டு. ஆனால், வெளிப்புற அரசியலை தொடுவதற்கு நிறைய பேர் இருக்கிறார்கள். எனவே, அதற்கு மிஷ்கினும் தேவை அல்ல. மனிதர்களின் உளவியலைப் பேசுவதே அவரது படங்களின் அரசியல். அரசியல் சார்பற்ற அழகியல்வாதம் தான் மிஷ்கினின் பாணி.

தான் காதல் படங்களை ஏன் எடுப்பதில்லை என்ற கேள்விக்கு பதிலளித்த மிஸ்கின், "என்னைப் பொறுத்தவரை, காதலை விட முக்கியமான பல உணர்ச்சிகள் உள்ளன. நான் மற்றவர்களை கேலி செய்து படம் எடுப்பதில்லை. ரொமான்ஸ் என்பது 18 முதல் 35 வயதுக்குள் நீங்கள் அனுபவிக்கும் ஒரு சிறிய அனுபவமாகும். அதனால் என்னால் அதை பெரிதாக காட்ட முடியாது. காதலுக்கு அப்பாலும் ஒரு வாழ்க்கை உண்டு, நான் எதைப் பற்றி பேசுகிறேன் என்பதைப் புரிந்துகொள்ள காதலை மட்டுமல்லாமல் பல்வேறு உணர்ச்சிகளை நீங்கள் அனுபவிக்க வேண்டும்" என்கிறார்.

மிஷ்கினின் பெரும்பாலான கதாநாயர்கள் வீரம் இல்லாதவர்கள், தயக்கமானவர்கள், உலகின் மோசமான நடவடிக்கைகளினால் உறிஞ்



ஓநாயும் ஆட்டுக்குட்டியும்

சப்பட்டுக் கொண்டிருப்பவர்கள். பின்னர் ஒருவித உணர்தல் நிலைக்கு ஆட்பட்டு கருமை நிலை யிலிருந்து வெண்மை நிலைக்கு மாறுபவர்களாக காணப்படுகின்றனர். 'அஞ்சாதே' சத்யா, 'ஓநாயும் ஆட்டுக்குட்டியும்' சந்துரு, 'யுத்தம் செய்' ஜே.கே போன்றோர் சில உதாரணங்கள்.

சில கதாநாயகர்கள் ஒருவித ஆத்மார்த்த தேடலை நோக்கிப் பயணப்படுபவர்களாக காணப்படுகின்றனர். 'பிசாசு' சித்தார்த், 'துப்பறிவாளன்' கணியன் பூங்குன்றன், 'சைக்கோ' கௌதம் போன்றோர் அவ்வகையில் அடங்குவர்.

வெறும் கருப்பு வெள்ளையாக மட்டுமல்லாமல் சாம்பல் நிற கதாபாத்திரங்களும் மிஷ்கின் படங்களில் காணப்படும். நல்லவராக இருக்க விரும்பும் தீயவர்கள், தீயவராக இருக்க விரும்பும் நல்லவர்கள், தீயதை நிறுத்த விரும்புபவர்கள், நல்லவராக இருப்பதை நிறுத்த வேண்டிய கட்டாயம் உள்ளவர்கள் என பலவாறாக அவர் படங்களில் மனிதர்கள் வெளிப்படுகின்றனர்.

தஸ்தாவஸ்கியின் 'குற்றமும் தண்டனையும்' நாவலின் கதைக்கரு குற்றவுணர்வு. இந்தக் குற்றவுணர்வுதான் மிஷ்கின் படங்களின் பொதுத்தன்மையாக காணப்படுகின்றது. அவரது முதல் படமான 'சித்திரம் பேசுதடி'-இல் கதாநாயகியின் தந்தை பாலியல் தொழிலாளியிடம் சென்றதற்கான பழியை கதாநாயகன் ஏற்றுக்கொள்ளுவான். அந்தக் குற்றவுணர்வால் கதாநாயகியின் தந்தை தற்கொலைசெய்துகொள்கிறார். 'அஞ்சாதே' படத்தில் கதாநாயகன் சத்யா மோசடி செய்து பரிட்சையில் சித்தி யெய்த, நன்றாகப் படித்த கிருபா தோல்வி அடைகிறான். இந்தக் குற்றவுணர்வு சத்யாவை கடைசிவரை உறுத்திக்கு கொண்டே இருக்கின்றது. 'நந்தலாலா' படத்தில் பாஸ்கர்மணிக்கு தனது தாயை இறுதியில் பார்க்கும்போது ஏற்படும் குற்றவுணர்வு; 'யுத்தம் செய்' படத்தில் கதாநாயகன் ஜே.கே.க்கு, தான் ஒரு சிறந்த சி.பி.சி.ஐ.டி ஆக இருந்தும் கூட தனது தங்கையைக் கண்டுபிடிக்க முடியவில்லையே என்கிற குற்றவுணர்வு; தான் பணத்துக்கு கொலை செய்யும் ஒரு கூலிப்படையாக இருந்தபோதும் கண்ணு தெரியாத ஒரு சிறுவனைக் கொன்றுவிட்டோமே என்ற வோல்ஃபின் குற்றவுணர்வு, 'துப்பறிவாளன்' படத்தில் தான் ஒரு துப்பறியும் முகவராக இருந்தும் கூட கதாநாயகியின் உயிரைக் காப்பாற்ற முடியவில்லையே என்ற கதாநாயகன் கனியன் பூங்குன்றனின் குற்றவுணர்வு; 'பிசாசு' படத்தில் தான் காப்பாற்ற நினைத்த பெண்ணை விபத்தின் மூலம் கொன்றதே தான்தான் எனத் தெரிய வரும்போது கதாநாயகன் சித்தார்த் படும் குற்றவுணர்வு என அனைத்திலும் குற்றவுணர்வே பிரதான உணர்வாக பிரதிபலிக்கின்றது.

தஸ்தாவ்ஸ்கியின் நாவல்களில் வரும் கதாபாத்திரங்கள் இயல்புடன் குழப்பங்களும் கொண்ட கதாபாத்திரமாகவே இருக்கிறார்கள். அக்கதாபாத்திரங்கள் காதலை உணரும்பொழுது



பிசாசு 2

தன்னை திருத்திக்கொள்வார்கள். காதலை மனது ஒரு நிமிடம் முழுமையாக உணர்ந்துகொண்டால் வாழ்க்கை முழுமைக்கும் அது போதுமானது என்கிறார் தஸ்தாவஸ்கி. கொடூரமான மனிதனை காதல் எவ்வாறு மாற்றுகிறது என்பதைக் காட்டும் 'சைக்கோ' படம் கூட தஸ்தாவஸ்கியின் தாக்கத்திலிருந்து உருவானது எனலாம். 'சைக்கோ' படத்தின் கதாநாயகன் காதலை உணரும்பொழுது தன்னை தானே அழித்துக்கொள்வது குற்றவுணர்வின் அதிஉச்சம் எனலாம்.

மிஷ்கினுக்கு எதிராக முன்வைக்கப்படும் மற்றொரு குற்றச்சாட்டு, அதிக மிகைப்படுத்தும் காட்சிகள். ஆனால், மிகைப்படுத்தப்பட்ட காட்சிகள் மூலம் பல நுணுக்கங்களையும் உருவகங்களையும் பார்வையாளர்களுக்குகடத்துவதுதான் அவரின் உத்தி. இறுக்கமான கதையின் மூலம் பார்வையாளர்களை மெலோட்ராமாட்டிக் (Melodramatic) என்னும் ஒருவித உயர் நிலையில் வைத்திருத்தலே அவரின் திறன்.

மிஷ்கினின் கதாபாத்திரங்கள் அதீத உணர்ச்சியை வெளிக்காட்டுபவர்களாக இருக்கிறார்கள் என்ற விமர்சனமும் பரவலாக மிஷ்கின் மேல் வைக்கப்படுகின்றது. தஸ்தாவஸ்கியின் 'குற்றமும் தண்டனையும்' நாவலில் வரும் கதாபாத்திரங்கள், அதீத மனநிலையில் இருப்பதைப் போன்று தோன்றினாலும் உண்மையில் அவர்கள் இயல்பானவர்களே, அகச் சிக்கல்களை வெளிப்படுத்தும் தருணங்களிலேயே அவர்கள் அதீத மனநிலையில் காணப்படுகின்றனர். அதேபோல்தான் மிஷ்கினின் கதாபாத்திரங்களும் அகச்சிக்கல்களைக் கொண்டிருப்பதனாலேயே அதீத உணர்ச்சிகளை வெளிக்காட்டுகின்றனர்.

காதாபாத்திரங்களின் உணர்ச்சிகளை முகத்தில் இருந்து மட்டுமல்லாது அவர்களின் கால்கள், அதனுடன் இணைந்த தரையின் மீதான காட்சிகள் மூலமும் காட்டுகிறார். சம்பவம் நடைபெறும் பிரதேசத்தைக் காட்ட அல்லது கதாபாத்திரத்தின் இன்னொரு முகத்தைக் காட்ட அல்லது நுட்பமான ஒரு குறியீட்டைக் காட்ட இவ்வாறான ஷாட்களை வைக்கிறார்.

உரையாடல் மூலமாக அல்லாமல், காட்சி மூலமாகவே அதிகமும் கதை சொல்ல முற்படும் மிஷ்கினின் காட்சி அமைப்பு ஒரு இலக்கணம் என்று கூட சொல்லலாம். கேமராக் கோணம் மூலமாக அவர் தொடும் எல்லை நிச்சயமாக தமிழ் சினிமாவுக்கு புதிதுதான். அதுவும் குறிப்பாக பறவைக் கோணத்தில் காட்சிகளை பார்ப்பதில் அலாதி பிரியம் கொண்ட மிஷ்கினின் காமிரா பெரும்பாலும் விளக்குகள் அல்லது மரத்தின் மேலே இருந்து காட்சிகளை பதிவு செய்யும். தனது காட்சிகள் பார்வையாளர்களிடம் அதிக தாக்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக வைட் ஆங்கிள் ஷாட்களையும் அதிகம் வைக்கிறார்.



இதனால் உரையாடல் செயலற்று, செயலுக்கான வாய்ப்பு அதிகமாகவும், கதை நடைபெறும் சூழல் பற்றிய ஆழமான புரிதலையும் புலத்தையும் கொண்டதாக அக்காட்சிகள் அமைந்து விடுகின்றன.

கதாபாத்திரத்தை முரட்டுத்தனமாக அல்லது வலிமையானதாக அல்லது சக்தி வாய்ந்ததாக காட்டுவதற்கு அல்லது சமாளிக்க முடியாத ஒரு சூழலை சித்தரிப்பதற்கு காமிராவை மிகக் குறைந்த புள்ளியில் மேல் நோக்கி வைக்கிறார். இதனால் கீழிருந்து ஒரு விடயத்தைப் பார்ப்பவர் ஒரு புழுவைப் போல அதை பார்க்கிறார். அவர் தன்னை ஒரு சக்தியற்ற புழுவாக எண்ணிக்கொள்கிறார். Worm's Eye Shot எனப்படும் இந்த காட்சிக்கு 'அஞ்சாதே' படத்தில் வரும் விளையாட்டு மைதானக் காட்சி மிகச் சிறந்த உதாரணம்.

இயற்கையான விளக்குகளை முடிந்தவரை பயன்படுத்தும் மிஷ்கின், பதற்றம், பயத்தை வெளிப்படுத்த நிழல்கள் மற்றும் நிழற்படத்தை நம்பி யிருக்கிறார். 'ஓநாயும் ஆட்டுக்குட்டியும்' படத்தில் மூன்று குழுவாக பாத்திரங்கள் அமர்ந்திருக்கும் காட்சி இதற்கு ஒரு சிறந்த உதாரணம். பிரகாசமான முழு வெளிச்சத்தில் ஒருவர், பகுதி வெளிச்சத்தில் இன்னொருவர், முழு இருளில் இன்னொருவர் என அவர்களின் பதற்றத்தை தெருவிளக்கின் வெளிச்சத்தின் ஊடாக சிறப்பாகக் காட்சிப்படுத்தியிருப்பார். அது தவிர செயற்கை விளக்குகள் கூட மிகத் தனித்துவமாகத்தான் பயன்படுத்தப்பட்டிருக்கும். 'யுத்தம் செய்' படத்தில் ஜே.கே தனது டார்ச் லைட்டைப் பயன்படுத்தி புருசோத்தமன் வீட்டைத் தேடும் காட்சி அதற்கு உதாரணம். இவை பார்வையாளர்களின் காட்சி அனுபவத்தை வேறு ஒரு நிலைக்கு உயர்த்துகின்றன. அத்துடன் வசீகரிக்கும் வயலின், மயக்கும் புல்லாங்குழல், பியானோ இசை போன்றன அதை இன்னும் இன்னும் இன்னும் உச்சமடைய செய்கின்றன

திரையரங்குகளிலேயே அல்லது நூறு நாட்களில் ஆயுட்காலம் முடிந்துவிடாமல் பல வருடங்கள் கழிந்த பின்பும் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியவை மிஷ்கின் படங்கள். ஒவ்வொரு முறையும் தனது படத்தைப் பார்க்கும்போது பார்வையாளர்கள் புதிய நுணுக்கங்களை புரிந்துகொள்ள வேண்டும் என விரும்பும் அவர், 'அஞ்சாதே', 'ஓநாயும் ஆட்டுகுட்டியும்', 'பிசாசு' போன்ற படங்களினூடாக இம்முயற்சியில் ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கின்றார்.

'சித்திரம் பேசுதடி' முதல் 'சைக்கோ' வரை உயிர்பிழைத்தல், பசி, மரண பயம், துரோகம், மன்னிப்பு, மனித நேயம், ஆன்மாவின் மோதல்கள், உள்ளுணர்வுகள் என பல உணர்ச்சிகளையும் அதனுடன் இணைந்த தத்துவங்களையும் சிக்கலான தொகுப்பாக இணைக்கும் போக்கு அவரது திரைப்படங்களில் காணப்படுகின்றது. அதற்காக திரில்லர் வகைக் கதைகளை ஒரு வாகனமாகப் பயன்படுத்துகிறார். அவ்வாகனத்தின் மூலம் அன்பையும் கருணையையும் நேசத்தையும் எல்லை யில்லா மனித அக்கறையையும் போதிப்பதே அவரது படைப்புகளின் இலக்காக இருக்கிறது. சுருக்கமாக சொன்னால், த்ரில்லர் கதைகளின் ஊடாக மனித வாழ்க்கையின் பல பரிணாமங்களைக் காட்டுவதே மிஷ்கினின் படங்கள். ●

**சு. கஜன்** <gajan2050@yahoo.com>


SRI VEERA'S CREATIONS
பல ஜவுளி கடை முதலாளிகளை உருவாக்கும் ஸ்தாபனம்
ஸ்ரீ வீராஸ் கிரியேஷன்ஸ்
SRI VEERA'S CREATIONS
(Silks Textiles & Readymade Showroom)
மொத்த விலை ஷோரூம்
Wholesale showroom
www.sriveeras.com
2 Wheeler & Car Parking வசதியுடன்
எண். 51-52/1, M.C. ரோடு, சென்னை - 600 021.
போன் : 2590 1771, 2590 1772, 2590 1773, 2590 1774



World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
PRECAST
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra,
executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore 25,300 Sq.ft completed within 60 days
Commercial Mall 2,25,000 Sq.ft completed in 120days
Hostel Building 26,000 Sq.ft completed in 70 days
Housing for CRPF 72 Days 1 Block 251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
•Design & Detailing
•Planning
•Production
•Transportation
•Erection
TYPES OF BUILDING
•Commercial
•Industrial
•Institutional
•Residential
•Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
A Group of The Chennai Silks
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in

# அக்சோலோத்

ஹூலியோ கொர்த்தஸார்

ஆங்கிலத்தில்: பிளாக்பர்ன்

தமிழில்: சமயவேல்

அக்சோலோத்களைப் பற்றி நான் அதிகம் யோசித்த ஒரு காலம் இருந்தது. ஜார்டின் டெஸ் பிளான்டஸில் உள்ள மீன்காட்சியகத்தில் அவற்றைப் பார்க்கச் சென்றேன். பல மணிநேரம் அவற்றைப் பார்த்தேன். அவற்றின் அசைவின்மையையும் மந்தமான அசைவுகளையும் கவனித்தேன். இப்போது நான் ஒரு அக்சோலோத்.

குளிர்கால தவக்காலத்திற்குப் பிறகு, பாரிஸ் அதன் மயில்வாலை விரித்துக் கொண்டிருந்த ஒரு வசந்தகாலக் காலையில், தற்செயலாக நான் அவற்றிடம் வந்தேன். இருபுறமும் மரங்கள் நிஷ்றைந்த போர்ட் ராயல் நெடுஞ்சாலைக்குக் கீழே நான் சென்று கொண்டிருந்தேன், பிறகு செயிண்ட் மார்செல்லையும் எல்ஹோபிட்டலையும் கடந்து, சாம்பல் நிறத்தில் இருந்த அந்த எல்லாவற்றிற்கும் மத்தியில் பச்சை நிறத்தைக் கண்டு, சிங்கங்களை நினைவு கூர்ந்தேன்.

நான் சிங்கங்களுக்கும் சிறுத்தைகளுக்கும் நண்பனாக இருந்தேன்; ஆனால், மீன்காட்சியகமாக இருந்த இருண்ட, ஈரமான கட்டிடத்திற்குள் சென்றதில்லை. இரும்புக் கம்பிச் சட்டகத் தடுப்பான்களுக்கு எதிராக என் பைக்கை விட்டுவிட்டு டூலிப் மலர்த் தோட்டத்தைப் பார்க்கச் சென்றேன். அங்கே சிங்கங்கள் சோகமாகவும் அசிங்கமாகவும் இருந்தன. என் சிறுத்தை தூங்கிக் கொண்டிருந்தது. நான் மீன்காட்சியத்தைப் பார்க்க முடிவுசெய்தேன். மிக சாதாரண மீன்களை ஆர்வமில்லாமல் சாய்வாகப் பார்த்தேன். எதிர்பாராதவிதமாக, அக்சோலோத்களை எனக்கு உடனே பிடித்துப்போனது. ஒரு மணி நேரம் அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, வேறு எதையும் யோசிக்க முடியாமல் கிளம்பினேன்.





செயின்ட் ஜெனெவீவ்வில் உள்ள நூலகத்தில், நான் ஒரு அகராதியைக் கலந்தாலோசித்தேன். அக்சோலோத்கள் என்பது ஆம்பிஸ்டோமா இனத்தைச் சேர்ந்த சாலமண்டர் இனத்தின் லார்வா நிலை (செவுள்களுடன் இருக்கும்) என்பதை அறிந்தேன். அவை மெக்சிகன் என்று நான் ஏற்கனவே அவற்றைப் பார்த்ததும் அறிந்துகொண்டேன். அவற்றின் சிறிய இளஞ்சிவப்பு ஆஸ்டெக் முகங்களையும் தொட்டியின் மேற்புறத்தில் உள்ள தகவல் பலகையையும் பார்த்தேன். வறட்சிக் காலங்களில் வறண்ட நிலத்தில் வாழவும் மழைக்காலம் வரும்போது நீருக்கடியில் தங்கள் வாழ்க்கையைத் தொடரவும் கூடிய அவற்றின் மாதிரிகள், ஆஃப்ரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டதாக நான் படித்தேன். அவற்றின் ஸ்பானிஷ் பெயர், அஜோலோத் (Ajolote). மற்றும் அவை உண்ணத்தக்கவை என்றும், அவற்றின் எண்ணெய், காட்-லிவர் மீனெண்ணெய் போலப் பயன்படுத்தப்பட்டது என்றும், ஆனால், இப்போது பயன்படுத்தப் படுத்தப்படுவதில்லை என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கண்டேன்.

தனிச் சிறப்புகொண்ட படைப்புகளில் எதையும் பார்க்க நான் கவலைப்படவில்லை. ஆனால், அடுத்தநாள், நான் மீண்டும் ஜார்டின் டெஸ் பிளாண்டஸ் சென்றேன். நான் தினமும் காலையிலும் சில நாட்களில் காலையிலும் பிற்பகலிலும் செல்ல ஆரம்பித்தேன். மீன்காட்சியகத்தின் காவலர் குழப்பத்துடன் சிரித்துக்கொண்டே என் டிக்கெட்டை எடுத்துக் கொண்டார். நான் தொட்டிகளுக்கு முன்னால் உள்ள இரும்புக் கம்பியில் சாய்ந்து நின்று அவற்றைப் பார்ப்பேன். இதில் விசித்திரம் எதுவும் இல்லை. ஏனென்றால், முதல் நிமிடத்திற்குப் பிறகு நாங்கள் இணைக்கப்பட்டுள்ளோம் என்று எனக்குத் தெரியும். முடிவில்லாமல் தொலைந்துபோன, தொலைதூரத்தில் உள்ள ஒன்று, எங்களை ஒன்றுசேர்த்து இழுத்துக்கொண்டே இருந்தது.

அந்த முதல் நாள் காலை, தண்ணீருக்குள்ளிருந்து சில குமிழ்கள் எழும்பியிருந்த இடத்திலிருந்த கண்ணாடித் தொட்டிக்கு முன், என்னைத் தடுத்து நிறுத்தியது போதுமானதாக இருந்தது. தொட்டியில் பாசியாலும் கல்லாலும் ஆன இழிவான குறுகிய (எவ்வளவு குறுகலானது, அவலட்சணமானது என்பதை என்னால் மட்டுமே அறிய முடியும்) தரையில் அக்சோலோத்கள் பதுங்கியிருந்தன. ஒன்பது மாதிரிகள் இருந்தன. பெரும்பான்மையானவை தங்கள் தலையை கண்ணாடி மேல் அழுத்தியிருந்தன. அவை, அருகில் வந்தவர்களை தங்கக் கண்களால் பார்த்துக் கொண்டிருந்தன. குழப்பமடைந்து, கிட்டத்தட்ட வெட்கமடைந்து, தொட்டியின் அடிப்பகுதியில் குவிந்திருக்கும் இந்த அமைதியான, அசையாத உருவங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதை ஒரு அசிங்கமாக உணர்ந்தேன். மனதளவில் நான், வலப்பக்கமும் மற்றவற்றிலிருந்து சற்றே விலகியும் இருந்த ஒன்றை, அதை நன்றாகப் பார்த்து கற்பதற்காக தனிமைப்படுத்தினேன். ஒளி கசியும் ரோஜா நிற சிறிய உடலைக் கண்டேன். (நான் சீனத்து பால் கண்ணாடி உருவங்களைப் பற்றி நினைத்தேன்) சுமார் ஆறு அங்குல நீளமுள்ள ஒரு சிறிய பல்லியைப் போல தோற்றமளிக்கும் இது, நம் உடலின் மிகவும் உணர்திறன் வாய்ந்த பகுதியையொத்த, அசாதாரண சுவையுடைய, மீனின் வாலில் முடிவடைகிறது. முதுகு வழியாக ஒளியூடுருவும் துடுப்பு ஒன்று ஓடியது, அது வாலுடன் இணைந்தது. ஆனால், என்னை மிகவும் கவர்ந்தது, மெல்லிய மனித நகங்களுடன் சிறிய விரல்களில் முடிவடையும் மெல்லிய அழகான பாதங்கள். அதன்பிறகு அதன் கண்களையும் முகத்தையும் கண்டுபிடித்தேன். விவரிக்க முடியாத அம்சங்கள். வேறு எந்தச் சிறப்புப் பண்பும் இல்லை, கண்கள் தவிர; இரண்டு ஊசித் துளைகள், முழுக்க ஒளிரும் தங்கம், உயிரில்லாதவை போல இருந்தன. ஆனால், பார்த்துக் கொண்டிருந்தன. என் பார்வையை ஊடுருவ அனுமதித்தன. இது தங்க நிலையைக் கடந்து பயணித்து, ஒரு மிக மெல்லிய ஒளியூடுருவக்கூடிய உட்புற மர்மத்தில் தன்னை இழப்பதாகக் காணப்பட்டது. கண்ணைச் சுற்றிலும் மிக மெல்லியதொரு கறுப்பு ஒளிவட்டம், இளஞ் சிவப்பு நிற சதையில், ஓரளவுக்கு முக்கோணமாக, ஆனால், வளைந்த, முக்கோணப் பக்கங்களுடன் கூடிய ரோஜாநிறக் கல்லையொத்த தலையில் பதிக்கப்பட்டிருந்தது. மொத்தத்தில் இது, காலத்தால் அரிக்கப்பட்ட ஒரு சின்னஞ்சிறு சிலையைப்போல இருந்தது. முகத்தின் தட்டையான முக்கோணப் பகுதியால் வாய் மறைக்கப்பட்டிருந்தது. அதன் அளவை மொத்த உருவத்துக்குத் தக்கவாறு நாம் யூகிக்க மட்டுமே இயலும்; வாய் முன்பாக ஒரு மென்மையான பிளவு உயிரற்ற கல்லை வெட்டியது. தலையின் இருபுறமும் காதுகள் இருக்க வேண்டிய இடத்தில், மூன்று சிறிய தண்டுகள், பவளம் போன்ற சிவப்பு, ஒரு தாவர வளர்ச்சி; செவுள்கள் என்று நான் நினைக்கிறேன். அதை பற்றிக் கூறுவதானால், வேகமாக இருந்தது; ஒவ்வொரு பத்து அல்லது பதினைந்து வினாடிகளிலும் தண்டுகள் விறைப்பாக, குத்திட்டு நின்று மீண்டும் தணிந்தன. எப்போதாவது ஒரு கால் அரிதாகவே நகரும், சிறிய கால்விரல்கள் பாசியின் மீது மென்மையாக, அமைதியுடன் அடக்கமாக இருப்பதைக் கண்டேன். "நாங்கள் அதிகம் நகர்ந்து மகிழ்வதில்லை, தொட்டி மிகவும் இறுக்கமாக உள்ளது. எந்தத் திசையிலும் நாங்கள் நகர்வதில்லை. வாலை அல்லது தலையை மற்ற எவர் மீதாவது இடித்துவிடுகிறோம். கஷ்டங்கள் உண்டாகின்றன; சண்டைகளும் சோர்வும். அமைதியாக இருந்தால் நேரம் மெதுவாக நகர்வதுபோல் இருக்கும்.

நான் முதல்முறை அக்சோலோத்களைப் பார்த்தபோது அவற்றின் அமைதிதான் என்னை ஈர்த்துப் பிடித்து அவற்றின் பக்கம் சாய்த்தது. ஒரு அலட்சியமான அசைவின்மையுடன் இடத்தையும் நேரத்தையும் அழிப்பதற்கான அவற்றின் ரகசிய விருப்பத்தை நான் தெளிவில்லாமல் புரிந்துகொண்டேன். நான் பின்னர் நன்றாக அறிந்தேன்; செவுள் சுருங்குதல், கற்களின் மீது மென்மையான பாதங்களைத் தற்காலிகமாகக் கணக்கிடுதல், திடீர் நீச்சல் ஆகியவை (அவற்றில் சில, உடலின் எளிய அலைவுடன் நீந்துகின்றன). அவை மணிக்கணக்கில் நேரத்தை செலவழித்த அந்த கனிம சோம்பலில் இருந்து தப்பிக்க வல்லவை என்பதை எனக்கு நிரூபித்தது. எல்லாவற்றிற்கும் மேலாக, அவற்றின் கண்கள் என்னை ஆட்கொண்டன. அவற்றின் இருபுறமும் நிற்கும் தொட்டிகளிலுள்ள வெவ்வேறு மீன்கள், அதிகமும் நம் கண்களையொத்த அவற்றின் அழகான கண்களின் எளிய முட்டாள்தனத்தைக் காட்டின. அக்சோலோத்களின் கண்கள் ஒரு வித்தியாசமான வாழ்க்கையின் இருப்பை, பார்த்தலின் மற்றொரு விதத்தைப் பற்றி என்னிடம் பேசின. கண்ணாடியில் என் முகத்தை அழுத்துகிறேன் (பாதுகாவலர் அவ்வப்போது எரிச்சலூட்டும் வகையில் இருமுவார்). இந்த ரோஜா நிற உயிரினங்களின் மெதுவான, தொலைதூர, எல்லையற்ற உலகின் நுழைவா யிலான, அந்த மிகச்சிறிய தங்கப் புள்ளிகளை, மேலும் சரியாகப் பார்க்க முயற்சித்தேன். அவற்றின் முகத்திற்கு நேராக கண்ணாடியில் ஒரு விரலால் தட்டுவது பயனற்றது; அவை ஒரு போதும் குறைந்த எதிர்வினைகூட ஆற்றுவதில்லை. தங்கக் கண்கள் அவற்றின் மென்மையான, பயங்கரமான ஒளியுடன் எரிந்துகொண்டே இருந்தன; அவை புரிந்துகொள்ள முடியாத ஆழத்திலிருந்து என்னைப் பார்த்தன. அது எனக்கு மயக்கத்தை ஏற்படுத்தியது.

ஆயினும்கூட அவை நெருக்கமாக இருந்தன. இதற்கு முன்பே, ஒரு அக்சோலோத்தாக இருப்பதற்கு முன்பே, நான் இதை அறிந்திருந்தேன். முதன்முறையாக அவற்றின் அருகில் வந்த அன்றுதான் கற்றுக்கொண்டேன். ஒரு குரங்கின் மானுடவியல் அம்சங்கள், அவற்றிடமிருந்து நம்



வரையிலான பயணத்தின் தூரம், பெரும்பாலான மக்கள் நம்புவதற்கு நேர்மாறாக இருப்பதாகத் தெரிவிக்கின்றன. அக்சோலோத்களுக்கும் மனிதர்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமையின் முழுமையான பற்றாக்குறை, எனது அங்கீகாரம் சரியானது என்பதை நிரூபித்தது; எளிமையான ஒப்புமைகளுடன் நான் முட்டுக்கொடுக்கவில்லை. சிறிய கைகள் மட்டுமே... ஆனால், பல்லியினத்தைச் சேர்ந்த எஃப்ட், பொதுவான நியூட் ஆகியவற்றிற்கும் இத்தகைய கைகள் இருக்கின்றன. மேலும் நாம் ஒரே மாதிரியாக இல்லை. தங்கத்தின் சிறிய கண்களுடன் கூடிய முக்கோண இளஞ்சிவப்பு வடிவத்திலான அக்சோலோத்தின் தலைகளே வித்தியாசப்படுத்துகின்றன என்று நினைக்கிறேன். அது,பார்த்து அறிந்துகொள்கிறது. அதுவே கோரிக்கை வைக்கிறது. அவை விலங்குகள் அல்ல.

புராணங்களுக்குள் விழுவது எளிதானது, கிட்டத்தட்ட வெளிப்படையானது என்று தோன்றும். மர்மமான மனிதகுலத்தை மீட்டெடுப்பதில் வெற்றிபெறாத உருமாற்றத்தை நான் அக்சோலோத்தில் பார்க்க ஆரம்பித்தேன். அவை, தங்களுடைய உடல்களின் அடிமைகள் என்பதைத் தெரிந்து வைத்திருந்தன என்றும் அதலபாதாளத்தின் மௌனத்திற்கும் நம்பிக்கையற்ற தியானத்திற்கும் முடிவற்ற தண்டனை விதிக்கப்பட்டவை என்றும் நான் கற்பனை செய்தேன். அவற்றின் குருட்டுப் பார்வை, எதையும் தெரிவிக்காத மிகச்சிறிய தங்க வட்டாக இருந்தபோதிலும் பயங்கரமாக பிரகாசித்து, ஒரு செய்தியாக எனக்குள் பாய்ந்தது: “எங்களைக் காப்பாற்றுங்கள், எங்களைக் காப்பாற்றுங்கள்.” குழந்தைத்தனமான நம்பிக்கைகளை வெளிப்படுத்தும் அறிவுரைச் சொற்களை நானே எனக்குள் முணுமுணுத்துக் கொண்டேன். அவை அசையாமல் தொடர்ந்து என்னைப் பார்த்தன; அவ்வப்போது செவுளின் ரோஜா கிளைகள் விறைத்தன. அந்த நொடியில் நான் ஒரு முடக்கு வலியை உணர்ந்தேன்; ஒருவேளை அவை என்னைப் பார்த்திருக்கலாம், அவற்றின் ஊடுருவுதல் அசாத்தியமான வாழ்க்கையின் விஷயத்திற்குள் ஊடுருவிச் செல்வதற்கு, என் வலிமையை ஈர்த்திருக்கலாம். அவை மனிதர்கள் அல்ல, ஆனால், என்னுடன் இவ்வளவு ஆழமான உறவை, எந்த மிருகத்திலும் நான் காணவில்லை. அக்சோலோத்கள் ஏதோ சாட்சிகள் போலவும், சில சமயங்களில் பயங்கரமான நீதிபதிகள் போலவும் இருந்தனர். அவற்றின்முன் நான் இழிவாக உணர்ந்தேன்; அந்த வெளிப்படையான கண்களில் ஒரு பயங்கரமான தூய்மை இருந்தது. அவை கூட்டுப் புழுக்கள். ஆனால்,கூட்டுப்புழு என்றால் மாறுவேடம், மேலும் மாயத்தோற்றம் என்று பொருள். எந்த உணர்வு வெளிப்பாடும் அற்ற, ஆனால், அடக்கமுடியாத கொடூரமும் கொண்ட அந்த ஆஸ்டெக்*1* (Aztec) முகங்களுக்குப் பின்னால், அதனுடைய காலத்தில் என்ன சாயல் காத்திருந்தது?

நான் அவற்றிற்குப் பயந்தேன். அருகில், மற்ற பார்வையாளர்களும் காவலர்களும் இருப்பதை உணராமல் இருந்திருந்தால், அவற்றுடன் தனியாக இருக்கும் அளவுக்கு நான் தைரியமாக இருந்திருக்கமாட்டேன் என்று நினைக்கிறேன். “உங்கள் கண்களால் அவற்றை உயிருடன் சாப்பிடுகிறீர்கள், ஆமாம்“ காவலாளி சிரித்துக்கொண்டே கூறினார்; நான் கொஞ்சம் கிறுக்கு என்று அவர் நினைத்திருக்கலாம். அவர் கவனிக்காதது

என்னவென்றால், அவை என்னை மெதுவாக தங்கள் கண்களால் விழுங்குகின்றன; தங்கத்தின், நரமாமிசம் உண்ணும் வழக்கம். மீன் காப்பகத்திலிருந்து நான் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் அவற்றைப் பற்றி மட்டுமே நினைக்கவேண்டியிருந்தது. அவற்றால் நான் பாதிக்கப்படுவதுபோல் உணர்ந்தேன். நான் ஒவ்வொரு நாளும் போய்க்கொண்டிருந்தேன் என்ற நிலைமை வந்தது. அவை இரவில், இருளில் அசையாமல் இருப்பதைப் பற்றி நினைத்தேன், மெதுவாக ஒரு கையை வெளியே நீட்டி, உடனடியாக மற்றொன்றை எதிர்கொண்டது. ஒருவேளை அவற்றின் கண்கள் ஆழ்ந்த இரவிலும் பார்க்க முடியுமாக இருந்தன. அவற்றின் பகல், காலவரையின்றி தொடர்ந்தது. அக்சோலோத்களின் கண்களுக்கு இமைகள் இல்லை.

விசித்திரமாக எதுவும் இல்லை, அதாவது, அது நிகழ வேண்டியிருந்தது என்று இப்போது எனக்குத் தெரிகிறது. ஒவ்வொரு காலையிலும் தொட்டியின் முன் சாய்ந்து நின்றதால், அங்கீகாரம் பெருமளவுக்கு இருந்தது. அவை தவித்துக் கொண்டிருந்தன. என் உடலின் ஒவ்வொரு இழைகளும் அந்த மூச்சுத்திணற வைக்கும் வலியை நோக்கி, தொட்டியின் அடிப்பகுதியிலுள்ள விறைத்திருக்கும் வேதனையை நோக்கிச் சென்றன. அவை ஏதோவொன்றுக்காக, அழிக்கப்பட்ட தொலைதூர தனனாதிக்கப் பிரதேசத்திற்காக, உலகம் அக்சோலோத்களினுடையதாக இருந்த சுதந்திர யுகத்துக்காக காத்திருந்தன. அவற்றின் கல் முகங்களில் இருந்த கட்டாய வெறுமையைத் தூக்கி எறியும் ஒரு பயங்கரமான உணர்வின் வெளிப்பாடு. அவை அனுபவித்துக் கொண்டிருந்த அந்தத் திரவ நரகத்தின் வலி, அந்த நித்திய தண்டனையின் ஆதாரம் ஆகியவற்றைத் தவிர வேறு எந்த செய்தியையும் கொண்டு செல்வது சாத்தியமில்லை. நம்பிக்கையில்லாமல், என்னுடைய சொந்த உணர்வு, அக்சோலோத்கள் மீது, எங்குமில்லாத உணர்வை வெளிப்படுத்துகிறது என்பதை எனக்கு நானே நிரூபிக்க விரும்பினேன். நானும் அவையும் அறிவோம். அதனால் நடந்ததில் விசித்திரம் எதுவும் இல்லை. என் முகம் மீன்காட்சியகத்தின் கண்ணாடியில் அழுந்தியிருந்தது. கருவிழி இல்லாத அந்தத் தங்கக் கண்களின் மர்மத்தை ஊடுருவிச் செல்ல என் கண்கள், மீண்டும் ஒருமுறை முயன்றன. கண்ணாடிக்கு அருகில், ஒரு அக்சோலோத்தின் அசையாத முகத்தை மிக அருகில் இருந்து பார்த்தேன். எந்த மாற்றமும் ஆச்சரியமும் இல்லை. என் முகத்தை, நான் கண்ணாடிக்கு எதிரில் பார்த்தேன். தொட்டியின் வெளிப்புறத்தில் பார்த்தேன். கண்ணாடியின் மறுபுறத்தில் பார்த்தேன். பிறகு என் முகத்தைப் பின்வாங்கியவாறு, புரிந்துகொண்டேன்.

ஒரே ஒரு விஷயம் விசித்திரமாக இருந்தது: வழக்கம் போல், தெரிந்துகொள்வதற்காக யோசித்துக்கொண்டே செல்வது. முதல் கணம், ஒரு மனிதன் உயிருடன் புதைக்கப்பட்ட தனது தலைவிதிக்கு விழித்திருக்கும் பயங்கரம் போன்றதாக அதை உணர்ந்தேன். வெளியே, என் முகம் மீண்டும் கண்ணாடிக்கு அருகில் வந்தது. நான் என் வாயைப் பார்த்தேன். உதடுகள் அக்சோலோத்களைப் புரிந்துகொள்ளும் முயற்சியில் அழுந்தியிருந்தன. நான் ஒரு அக்சோலோத்தாக மாறியிருந்தேன். இப்போது எந்த புரிதலும் சாத்தியமில்லை என்று எனக்கு உடனடியாகத் தெரிகிறது. அவர் மீன்காட்சியகத்திற்கு வெளியே இருந்தார்; அவரது சிந்தனை தொட்டிக்கு வெளியிலுள்ள சிந்தனை. அவரை அடையாளம் கண்டு, அவரே என்பதால், நான் ஒரு அக்சோலோத்தாக என் உலகில் இருந்தேன். திகில் தொடங்கியது. அதே தருணத்தில் நான் கற்றுக்கொண்டேன். ஒரு அக்சோலோத்தின் உடலில் நானே சிறைப்பட்டிருக்கிறேன் என்று நம்புவது; என் மனித மனதுடன் அதற்குள் உருமாற்றம் அடைந்திருக்கிறேன். ஒரு அக்சோலோத்திற்குள் உயிருடன் புதைக்கப்பட்டிருக்கிறேன். பிரக்ஞையற்ற உயிரினங்களுக்கிடையே தெளிவுடன் நகர்வதற்கு விதிக்கப்பட்டிருக்கிறேன். ஆனால், ஒரு கால் என் முகத்தை மெல்ல உராய்ந்தபோது அது நின்றது, நான் கொஞ்சம் கொஞ்சமாக ஒரு பக்கமாக நகர்ந்தபோது, எனக்கு அடுத்திருந்த ஒரு அக்சோலோத் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தது. மேலும் தொடர்பு சாத்தியமில்லை என்று அதற்கும் மிகத் தெளிவாகத் தெரியும். அல்லது அதற்குள் நானும் இருந்தேன், அல்லது நாங்கள் எல்லோருமே, வெளிப்படுத்தும் திறன் இன்றி, மனிதனைப் போல சிந்தித்துக் கொண்டிருந்தோம். மீன்தொட்டி மீது அழுந்தியிருந்த மனிதனின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் எங்கள் கண்களின் தங்கமயமான பேரழகுத்தோற்றத்துடன் மட்டுப்படுத்தப்பட்டோம்.

அவர் பல முறை திரும்பி வந்தார். ஆனால், இப்போது அடிக்கடி வருவதில்லை. அவர் வராமல் பல வாரங்கள் கழிந்துவிட்டன. நான் நேற்று அவரைப் பார்த்தேன், அவர் நெடுநேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு விறுவிறுப்பாக வெளியேறினார். இனியும் அவர் நம்மீது அவ்வளவாக ஆர்வம் காட்டமாட்டார் என்று எனக்குத் தோன்றியது. அந்தப் பழக்கத்திலிருந்து அவர் வெளியேறிக் கொண்டிருந்தார். என்னால் செய்ய முடிந்த ஒரே விஷயம் சிந்திப்பது என்பதால், அவரைப் பற்றி என்னால் அதிகம் சிந்திக்க முடிந்தது. ஆரம்பத்தில் நாங்கள் தொடர்ந்து தொடர்பில் இருந்தோம், எப்போதையும்விட அதிகமாக அவர் மர்மத்துடன் ஒன்றியிருப்பதாக உணர்ந்தார்; அந்த மர்மமே அவரை உரிமையுடன் எடுத்துக்கொண்டது என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், அவருக்கும் எனக்கும் இடையிலிருந்த பாலங்கள் உடைந்துவிட்டன. ஏனென்றால் அவரது விடாப்பிடியான எண்ணம் இப்போது, அவரது மனித வாழ்க்கைக்கு அந்நியமான, ஒரு அக்சோலோத். ஆரம்பத்தில், அவரிடம் திரும்பிவிடும்




***திறமை எனக்கிருந்தது. ஒரு குறிப்பிட்ட வழியில் - ஆமாம், ஒரு குறிப்பிட்ட வழியில் மட்டுமே - எங்களை நன்றாக அறிந்துகொள்ளும் அவரது ஆசையை விழித்திருக்கச் செய்வது மட்டுமே என்று நினைத்தேன். நான் இப்போது நல்லதொரு அக்சோலோத், நான் ஒரு மனிதனைப் போல் சிந்திக்கிறேன் என்றால், ஒவ்வொரு அக்சோலோத்தாலும் தனது ரோஜாக்கல் தோற்றத்திற்குள் ஒரு மனிதனைப் போல சிந்திக்க முடியும் என்பதால்தான். நான் இன்னும் அவராக இருந்த அந்த முதல் நாட்களில் அவரிடம் எதையாவது தொடர்புகொள்வதில் இவை அனைத்துமே வெற்றிபெற்றன என்று நான் நம்புகிறேன். அவர் இனி ஒருபோதும் வரமுடியாத இந்த இறுதித் தனிமையில், ஒருவேளை அவர் நம்மைப் பற்றி ஒரு கதை எழுதப் போகிறார், அவர் ஒரு கதையை உருவாக்குகிறார் என்று நம்பி, அவர் அக்சோலோத்களைப் பற்றி எழுதப் போகிறார் என்று நினைத்து என்னை நான் ஆறுதல்படுத்துகிறேன்.***

---

ஆஸ்டெக்[1] மக்கள், மெக்ஸிகோவைத் தாயகமாகக் கொண்டவர்கள். மெக்ஸிகோ பள்ளத்தாக்கின் மையத்தில் அவர்கள், ஒரு பெரும் பேரரசை நிறுவியிருந்தார்கள். அந்த அரசை 16ஆம் நூற்றாண்டில் கார்ட்டெஸ்ஸும் அவரைப் பின்பற்றுபவர்களும் தோற்கடித்தார்கள். ஆஸ்டெக்குகள், அவர்களுடைய வேளாண்மை, நிலம், கலை, கட்டிடவியல் ஆகியவற்றுக்காக புகழ் பெற்றிருந்தார்கள். அவர்களிடம் எழுத்துத் திறமையும் ஒரு காலண்டர் அமைப்புமுறையும் இருந்தன. அவர்கள் கோவில்களை அமைத்தார்கள். தங்களுடைய கடவுள்களுக்கு மனிதர்களைப் பலியிடும் வழக்கம் அவர்களிடம் இருந்தது.

---

இக்கதை குறித்து சமயவேல் குறிப்பு:

ஹூலியோ கொர்த்தஸாரின் கதைநாயகன், அக்சோலோத்களை தற்செயலாக சந்தித்தது போலவே நானும் இந்தக் கதையை தற்செயலாக வாசிக்க நேர்ந்தது. சூழலியல் இலக்கியம் என்பது ஒரு தனி வகைமையாக ஆகிவரும் தற்காலத்தில், 1956இல் கொர்த்தஸாரால் எழுதப்பட்ட இக்கதையின் பின்னால் இருக்கும் உயிரியல் மற்றும் சூழலியல் உணர்வு ஆச்சரியம் அளிக்கிறது. தற்போதைய மெக்ஸிகோ நகரத்தின் அடியில் புதையுண்டுபோன இரண்டு ஏரிகளில் வசித்த சாலமன்டர் இனத்தைச் சேர்ந்த அக்சோலோத்கள் மிக விசித்திரமான பிராணியாகும். லார்வாப் பருவத்தைக் கடக்காமலே முதுமையடையும் துயரம் குறித்தும் அவற்றின் பரிணாம உருமாற்றத்திற்கான ஏக்கம் பற்றியும் பேசுகிறது. அக்சோலோத்கள் நீரிலும் நிலத்திலும் வாழும் பிராணி (Amphibian). ஆம்பிபியன்கள் தங்களுடைய வளர்ச்சிப்போக்கில் உருமாற்றம் நிகழ்ந்து செவுள்களை உதிர்த்துவிட்டு நிலத்தில் வாழ ஆரம்பிக்கின்றன. ஆனால், அக்சோலோத்களில் இந்த உருமாற்றம் நிகழாமல் தொடர்ந்து நீரிலேயே வசிக்கின்றன. மேலும் ஒரு அக்சோலோத்தின் மரபணுத் தொகுப்பின் நிரலொழுங்கு (genome sequence), மனித மரபணுத் தொகுப்பைவிடப் பத்து மடங்கு நீளமானது. அவை தங்களது உறுப்புகளை இழக்கும்போது அவற்றை மறுவுருவாக்கம் செய்யும் வல்லமை கொண்டவை. மருத்துவ உலகில் அக்சோலோத்கள் 'மாதிரி உயிரிகளாக' இருக்கின்றன. முக்கியமாக இதய நோய்கள் பற்றிய ஆய்வுகளில் பெரிதும் உதவுகின்றன. தற்சமயம் மிகவும் அருகிப்போன பிராணியாக (higly endangered species) அறிவிக்கப்பட்டிருக்கும் அக்சோலோத்களின் எட்டு மாதிரிகள் ஒரு மீன்காட்சியகத்தின் தொட்டிக்குள் அடைபட்டிருப்பதை வேதனையோடு விவரிக்கிறது இந்தச் சிறுகதை. உயிர்ப் பிராணிகளிடம் மனிதர்கள் கொண்டிருக்கும் அக்கறைகள் எல்லாமும் அவற்றைப் பாதிக்கின்றன என்பதை யாரும் உணர்வதில்லை.

**சமயவேல்** <samayavelbsnl@gmail.com>

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின் பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..

# சங்க காலம்

க்ருஷாங்கினி

சங்க கால இலக்கியப் பாடல்களை வெறும் மொழிக்கான பாடல்களாகக் காணாமல் ஒரு சர்வதேச குரல் என்ற பார்வையில் பார்த்தோமானால் அதற்கும் இடமுண்டு. அந்தளவு பரந்து விரிந்த நோக்குக் கொண்டது. அதேநேரம், தமிழ் என்பது தனித்து ஒலிப்பதையும் சங்கப் பாடல்களில் கேட்க முடியும்; தமிழ்நாடு என்பதும் அப்போதே இருந்ததையும் காண முடிகிறது.

வாய்விட்டுச் சொல்லி மக்களிடம் சென்றடையச் செய்ததன் வாயிலாக சங்க காலத்தில் கவிஞர்கள் மக்களிடையே ஒரு ஊடக சாதனம் போல் பரவினார்கள். அவர்களின் பாடுபொருளானது தமிழன், நிலப்பரப்பு, உலகக் கண்ணோட்டம் என்ற மூன்று நிலையில் இருக்கிறது. அவர்கள் பாடல்களில் தனிமனித உணர்வுகள் குறிப்பிடப்படக் கூடாது என்பதற்காக மானுட உணர்வுகள் தனி மனிதப் பெயர்களைத் தாங்கி வருவதில்லை. தலைவன், தலைவியென உணர்ச்சிகள் பொதுவாக்கப்படுகின்றன. நிகழ்ச்சிகள், தனி மனித வாழ்வாகக் கருதாமல் பொது மானிட வாழ்வின் போக்கினை குறிக்கும்படியாகவே அமைந்துள்ளன. அரசன் முதல் ஆண்டி வரை அனைவரையும் ஒரே நோக்கில் காண்பது, இலக்கியத்தில் மக்களைப்புறக்கணிக்காதபோக்காகஉள்ளது. புராணக் கதைகளை இணைக்கும் மரபாகக் கொள்ளாமல், நாட்டுப் பாடல்களோடு தொடர்பு கொண்டுள்ளது.



தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் சங்க இலக்கியத்தின் இரண்டு போக்குகள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவரின் ஆராய்ச்சிப்படி, ஒரு சாரார், புரவலர்களைப் போற்றிப் பாடி அவர்களைத் தன் கருப்பொருளாகக் கொண்டு துதி பாடி வந்தனர். அது வெறும் இலக்கணக் குறிப்புகள் கொண்டு கட்டமைக்கப்பட்டவைகள். மற்றொரு சாராரோ, அப்பொழுது வாழும் மக்களின் மனோநிலை, மொழி ஆகியவற்றைக் கொண்டு கவிதைகள் புனைந்து மொழிக்கு வேற்றுருவம் தந்தனர்.

சங்க காலத்தில் கல்வி கற்பதில் ஆடவர் - பெண்டிர் இருபாலாருக்கும் சம வாய்ப்பு கொடுக்கப்பட்டது. ஆனால், கல்வி கற்கும் முறையில் வேற்றுமை இருந்தது. போர்க்கலை, ஆட்சியியல், பொருளீட்டுதல் முதலியன ஆண்களுக்கும், இல்லறத்தை செம்மையாக்கும் கல்வியோடு நுண்கலைகளும் பெண்களுக்கானதாகவும் இருந்தது.

ஆயினும், சங்ககாலத்தில் பெண்ணுரிமை பேணப்பட்டது. பெண்ணடிமைத் தனம், பெண் மேல் வெறுப்பு ஆகியவை அக்காலத்தில் தோன்றவில்லை. பெண்ணுக்கு, கல்வி, இலக்கிய உரிமை, தனக்கேற்றவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, தொழில் உரிமை அனைத்தும் இருந்தது.



அதேநேரம், சங்க காலத்தில் ஆண் - பெண் இடையே சம உரிமை இருந்ததில்லையென வாதாடும் வழக்கமும் உண்டு. பலதார மணம் என்பதைச் சுட்டிக்காட்டி இதைச் சொல்கிறார்கள் சிலர்.

தற்காலத்தில் பெண்கள் பெயர் கொண்டு எழுதும் ஆண்கள் அதிகம் உள்ளனர். தங்கள் அரசாங்க வேலைக்கு மாசு வந்து விடக்கூடாதே என்பதற்காக, பெயர் சற்று கவர்ச்சிகரமானதாக இருக்க, பெண்களின் நிலை குறித்து பெண்களே எழுதியது என்கிற மாயத் தோற்றத்தோடு படிக்கத் தருவதற்கு, சிவப்பு விளக்குக் கதைகள் போன்றவற்றை எழுத என்று பெண் பெயர்கள் கொண்டவர்கள். வெகு ஜன இலக்கியம், சிற்றிதழ் இலக்கியம் இரு பகுதிகளிலும் இது போன்றவர்கள் உள்ளனர்.

சங்க காலத்திற்கு வருவோம்.. காமக்கணிப் பசலையார், போந்தைப் பசலையார் போன்றவர்களைப் பெண்கள் என்று சொல்வோரும் உண்டு. முடத்தாமரைக் கண்ணியாரையும் பெண் என்போர் உண்டு. ஆராயும் அறிஞர்களுக்கு ஏற்ப எண்ணிக்கை மாறுபட்டுக் கொண்டே உள்ளது. எழுதிய கவிஞர் பெயர் தெரியாமல் பல பாடல்களும் உள்ளது.

சங்ககால பெண்பாற் புலவர்கள் 41 என அவ்வை து. நடராஜன் வரையறுத்துள்ளார். ந. சஞ்சீவி ஆராய்ச்சிப்படி சங்ககாலப் பெண் புலவர்கள் 36. ஐங்குறு நூறிலும் கலித் தொகையிலும் பெண் கவிஞர்கள் ஒருவர் கூட இல்லாதது ஆச்சரியம் அளிப்பதாக உள்ளது என்கிறார் சஞ்சீவி.

நாற்பத்தியோரு பெண்பாற் புலவர்கள் என்றாலும் அவர்களின் பாடல்கள் ஒன்று, இரண்டு என்ற எண்ணிக்கையில் உள்ளன. அவ்வையார் மட்டுமே 59 பாடல்கள் எழுதியுள்ளார். அவ்வையாருக்கு அடுத்தபடியாக வெள்ளிவீதியார் 13 பாடல்கள் எழுதியவர்.

அகம், புறம் என இருவகையிலும் பாடல்களையும் பெண்பாற் புலவர்கள் பாடியிருந்தாலும் அகம் பற்றி மட்டுமே பாடியவர்கள் அதிகம். ஔவை மட்டுமே புறம் பற்றி அதிகம் கவிதைகள் இயற்றியுள்ளார்.

தலைவன் தலைவியின் ஊடல் பற்றியும் உடலுறவு பற்றியும் பெண் கவிஞர்களின் பாடல்களில் அதிகம் காணப்படுவதில்லை. தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவியைக் காணாத தலைவன் போன்ற பாடல்கள்

மட்டும் இடம்பெற்றுள்ளன. ஆண் - பெண் கலவி பற்றிப் பெண்கள் எழுதாததற்குக் காரணம் நாணம் என்பதாகக் கொள்ளலாம் என்கிறார் அவ்வை து. நடராசன்.

பெண்கள் தாய்மைப் பேற்றை அடையாமல் வீணாவது குறித்துப் பாடல்கள் புனைந்துள்ளனர். ஆயின் ஆண்கள் இது பற்றி அதிகம் கவலை கொண்டதாகத் தெரியவில்லை.

அவ்வையார் பற்றி பின்னர் தனியாக விரிவாக பார்ப்போம்; இந்த அத்தியாயத்தில் மற்றவர்களைப் பார்க்கலாம்.

வெள்ளிவீதியார் 13 பாடல்கள் எழுதியவர். இவரின் பாடல்களில் இவரின் வாழ்வனுபவங்கள் எதிரொலிக்கின்றன. நோயின் காரணமாகத் தனது வாழ்வில் ஏற்பட்ட தாபங்களை விவரிக்கும் பாடல்கள் அநேகம். அதேபோல தாய்மை எய்த இயலாத நோயால் தன் இளமையும் வாழ்வும் ஒருசேர அவலமானதாகவும் குறிப்பிடுகிறார். பாங்கனும் தலைவனும் பாடுபொருளாக நிகழ்த்தும் பாடல் ஒன்று இவரால் இயற்றப்பட்டுள்ளது.

'வெண்ணை ஞாயிற்றின் வெப்பத்தால் உருகிப் பரந்துபட்டதுபோலக் காமம் நோயாய் பரந்துள்ளது. அவ்வெண்ணெய் உருகாமல் காக்கும் பொருட்டு ஊமை தன்னுடைய கைக்குறையால் அதனைப் பிரிதோர் இடத்தில் வைத்துப் பாதுகாக்கவும், ஊமைத் தன்மையால் பிறரைக் கூவிப் பாதுகாக்கச் செய்யவும் இயலாததுபோல, இந்நோய் அடக்கிப் பாதுகாத்தற்குரிய ஆற்றலையும் பிறரிடம் வெளி யிடற்குரிய நிலையும் பெற்றிலேனாதலின் இதனைக் காக்க இயலேனாயினேன்' என்று உ.வே. சாமிநாதர் விளக்கம் அளித்துள்ளார்.

தலைவன் தன்னைத் துறந்து பரத்தையோடு காலம் கழித்துவிட்டு வீடு திரும்பும் நிலைகண்டு, தனது சினத்தை வெளிப்படுத்துகிறார், வெள்ளிவீதியார். பல்லைக் கடித்து 'நற நற'வென்றெழுப்பும் ஒலியைக் கவிதையில் இடம்பெறச் செய்கிறார். தனது வாழ்க்கையின் அவலச் சுவையை பல நிலைகளில் 13 பாடல்களில் வெவ்வேறு உருவத்தில் வெளிப்படுத்துகிறார்.

காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், மொத்தம் 12 பாடல்கள் இயற்றியுள்ளார். இவரது பாடல்களில் வீரம், காதல், கலை ஆகியன கலந்து ஒலிக்கும். சேரமன்னன் காதலில் உயர்ந்தவனா, ஈதலில் உயர்ந்தவனா என கேள்வி பதிலாகப் பாடல் இயற்றியுள்ளார். அதில் அரசன் - அரசிக்கிடையேயான ஊடலை நகைச்சுவையுடன் வர்ணிக்கிறார். போர்க்களத்தில் மதில்கள் பல கைப்பற்றிய அரசன் காதலில் ஒரு சிறு மலரைக்கூட கைப்பற்ற இயலாத நிலை குறித்து எழுதியுள்ளார்.

ஆண்களின பெருமை மகளிராலும் ஏற்றம் அடைவதுண்டு என்பதைக் குறிப்பது போல, 'ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்னும் அரசனை, 'ஆன்றோள் கணவா' என மனைவியின் பெயரை முன்நிறுத்தி விளித்துப் பாடியுள்ளார். வீரர், பாணர், கூந்தர், விறலியர் ஆகியோரைப் பற்றிப் பாடும்போதோ மற்ற சமயத்திலோ இவர் கள்ளுணவைப் பற்றிப் பேசவேயில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

அள்ளூர் நன் முல்லையார், பதினோரு பாடல்களை இயற்றியுள்ளார். இவர் பாடல்களிலும் 'துயரம்' என்பதே பிரதானமான பாடுபொருளாக உள்ளது. ஆயினும் 'வெள்ளிவீதியாரின்' பாடல்களில் காணப்படுவதைக் காட்டிலும் இவற்றில் பாடு பொருளில் துணிவு குறைவாகவே உள்ளது. இவரின் ஒரு பாடல் குறிப்பை இங்கே காண்போம். மலராக இருந்து அதுவே முள்ளாக மாறுவது நெருஞ்சிப் பூவின் இயல்பு. காதலே பகையாய் மாறியதற்கு இப்பூவை உவமையாக்குகிறார் கவிஞர். அகநானூறில் உள்ள ஒரு பாடலில் அரசனைப் புகழ்ந்தும் தனது இருப்பிடப் பற்றையும் விவரிக்கிறார்.

அவ்வையார், வெள்ளி வீதியார், காக்கைப்பாடினியார், நச்செள்ளையார், போன்று சிறந்த பெண்பாற் புலவர்களில் நன்முல்லையாரையும் இணைக்கிறார் உ.வே. சாமிநாதர்.

கழார் கீழெயிற்றியாரின் எட்டுப் பாடல்கள் காணக்கிடைக்கின்றன. பாலைத் தளத்தில் பாடியவர் இவர். பாலைத் திணையில் தலைவி தலைவனின் மணல் மிகுந்த நெடுவழியின் துயரங்கள் பற்றிப் பாடுவது வழக்கம். ஆனால், இவரோ தலைவி இருக்குமிடத்தில் 'வாடையை'ப் பற்றிப் பாடி தலைவனின் 'பாலை'யைக் குறிக்கிறார். எனவே, 'வாடை பாடிய புலவர்' என்ற அடைமொழியுடன் இவரைக் குறிப்பிடலாம். 'கோடையிலேயே தலைவன் பிரிவைத் தாங்க இயலாதவர் வாடையில் எங்கனம் தாங்குவார்?' என்று விரகத்தைக் கூறுவார்.

கச்சிப்பேட்டு நன்னாகையார் இயற்றிய பாடல்கள் 6. இவரின் பாடல்களில் தலைவனைப் பிரிந்த காலத்தில் தலைவி பூ அணிதல், கூந்தலைச் சீர் செய்தல் ஆகியவற்றை செய்யமாட்டார்கள் என்று கூறுகிறார்.

ஒக்கூர் மாசாத்தியார், 8 பாடல்களுக்கு உரியவர். இவர் எழுதிய ஒரேயொரு புறத்திணைப் பாடல் மிகவும் பிரசித்திப் பெற்றது.

மாற்றோகத்து நப்பசலையார் இயற்றிய பாடல்கள் ஏழு. மூன்று பாடல்கள் கிள்ளி வளவன், மலையமான், திருமுடிக்காரி, சோழிய ஏனாதி, திருக்கண்ணன், அவியன் ஆகிய அரசர்கள் மீது பாடப்பட்டவையாகும். கிள்ளிவளவன் தர்ம



சிந்தனை, வீரம் ஆகியவற்றைப் பற்றி நப்பசலையார் நலங்கிளார் உத்தியைக் கையாள்கிறார். கிள்ளி வளவன் மீது பாடப்பட்டுள்ள கையறு நிலைப் பாடல் நப்பசலையாரின் புலமைக்கு ஒரு எடுத்துக்காட்டு.

எல்லோருக்கும் அள்ளி வழங்கும் கிள்ளி வளவன் மறைவு, அதன் துக்கம் பாணர்களுக்கு அதிகமா அல்லது அவனுடைய அன்பு மனைவிக்கு அதிகமா? என்ற கேள்வி எழுப்பி, கணவன், மறைவினால் ஏற்படும் விதவைக் கோலம் என்பது புரவலர்களை விடக் கொடுமையானது என மனைவியின் நிலைக் குறித்தும் பெண் நிலைக் குறித்தும் ஏக்கம் அடைகிறார்.

அசுணப் பறவை யாழில் மயங்கிய நொடி அதிர் பறை அடித்து அதனை அதிர்ச்சியில் கொல்வதற்கு ஒப்பானது என அரசனின் மரணத்தை ஒப்பிடுகிறார் புலவர்.

சங்க கால சடங்குகளில் ஒன்றான வெறிப் பாடல் பற்றி 'வெறி பாடிய' காமக் கண்ணியார் எழுதிய ஐந்தில் மூன்று பாடல்களில் உள்ளன. எனவே, வெறிப் பாடலைப் பாடி சிறப்பித்ததைக் கொண்டாடும் வகையில் இவருடைய பெயருடன் வெறிபாடிய என சிறப்புப் பெயரும் இணையப் பெற்றவர். இவரின் பாடலில் ஒன்று தலைவி தலைவனுடன் கூடல் ஏற்பட்டதால் பசலை நீக்கி உற்சாகம் கொள்கிறாள். ஆனால், மற்றவர்கள் முருகனுக்கு எடுத்த வெறியாடல் சடங்கால்தான் தலைவி பசலை நோய் நீங்கினாள் என கேலிக்குரிய வகையில் பேசுகின்றனர்.

வெண்பூதியார், மூன்று பாடல்களுக்கு உரியவர். மூன்றும் தலைவி கூற்றாகவே அமைந்துள்ளது. காதலால் ஏற்படும் பிரிவையும் அதனால் ஏற்படும் விளைவையும் சோகக்குரல் ததும்ப எடுத்துரைத்துள்ளார்.

பெரும்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார், மூன்று பாடல் எழுதியுள்ளார். தோழியின் நாவண்மை தலைவியின் கனவின் பயம், தாய் தூக்கமற்றுப் போனது என கவி பாடியுள்ளார். இவருடைய பாக்களில் கவி நயம் அதிகம்.

பொன்முடியார், மூன்று பாடல்கள் இயற்றியுள்ளார். கதிரை மறம், நூழிலாட்டு, மூதில் முல்லை துறைகளைச் சார்ந்தவை இவரின் கவிதைகள். இவர் பூப்பெய்தியதை போர்களத்துடன் ஒப்பிட்டு உவமை நயமுடன் பாடியுள்ளார்.

பூக்கண் உத்திரையார், இரண்டு பாடலுக்கு உரியவர். பெண்ணின் கற்பொழுக்கத்திற்கு இடையூறு ஆகும் நொதுமலர் வரைவு பற்றி கூறியுள்ளார். களவியல் ஒழுகும் மகளிற் சிறப்பும் கூறியுள்ளார்.

நெடும் பல்லியத்தையுடையது இரண்டு பாடல்கள். களவியல் காலத்தில் காதலனாயிருந்த போதும், திருமணம் முடிந்த பின் தலைவனின் புணர்ச்சியில் உண்டான மாறுதல்கள் பற்றியும் கூறி ஆதங்கப்படுகிறார். இவரின் கவிதைகளில் கரு இதுவே.

மாற்பித்தியாரின் இரு பாடல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் துறவு பற்றிப் பாடிய பெண் பாற் புலவர் இவர் ஒருவரே. இதனால் இவர் தனித்து நிற்கிறார்.

நன்நாகையாருக்கு உரியது இரண்டு பாடல்கள். இரவில் கதவைச் சாத்துவதற்கு முன்பாக விருந்தினர் உளரோ என்று கூவிப் பார்க்கும் சாக்கில் தன் தலைவனுடன் உரையாட அச்சமயத்தைப் பயன்படுத்த என்னும் உணர்வை நைச்சியமாகக் கூறி உள்ளார் இவர். மற்றொரு பாடல் வேடிக்கைப் பேச்சு, எப்படி கணவன் - மனைவி இடையே வேற்றுமையை விளைவித்தது என்பது குறித்தான பாடல்.

மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையாருக்கு உரிய பாடல் இரண்டு. பரத்தையுடன் இருந்து மீண்ட தலைவன் தன் இல்லத்தில் நுழையும் போது ஏற்படும் காட்சி பற்றியது ஒன்று. அறத்தோடு இருக்கும் தலைவன் தன்னைப் பொருள் காரணமாகப் பிரியும் போது அவனிடம் தன் காமம் பற்றிக் எடுத்துரைப்பது போல் அமைந்துள்ள பாடல் மற்றொன்று.

தாயங்கண்ணியார் பாடல் ஒன்றே ஒன்றுதான். கணவனுடன் இணைந்து வாழும் குடும்பத்தில் மங்கல

**பணம் மட்டும் வாழ்வாகாது என்று இருவரும் உணராத வரையில் இல்வாழ்க்கை சிறப்பாக எப்படி அமைய முடியும்? இளமை கழிந்து பின் கூடி வாழ்ந்து என்ன பயன்? இன்றைய நாட்களில் கப்பலில் வேலை செய்யும் கணவனைக் கொண்ட, வெளிநாட்டில் வேலை செய்யும் கணவனைக் கொண்ட பல பெண்கள் குடும்ப பாரம் முழுவதும் ஏற்று நடத்திக் களைத்துப் போவதை நாமும் பார்க்கிறோம்தானே..**

நிலையையும் கணவனை இழந்த கைம்பெண்ணின் அவலத்தையும் ஒப்பிட்டுக் கூறிய பாடல் அது.

நல்வெள்ளியார் பாடல்கள் மூன்று. கார் காலத்தில் பெரு மழையில் தலைவன் தன்னை வந்து ஆட் கொள்வான் என்ற அர்த்தத்தில் எழுதிய பாடல்கள் இவை.

வெண்ணிக்குறத்தியார், தோல்வி அடைந்த அரசனின் மேன்மைகளைத் தன் அரசன் முன்னால் தைரியமாகப் பாடியவர். தன் சார்ந்த அரசன் அடைந்த வெற்றி, கொண்டாடப்பட்டு, தோற்ற அரசனின் நிலைப் பற்றி நினைக்காதிருப்பதுதான் இயல்பாக வீர ரசம் பாடும் புலவர்களின் வழக்கம். வெண்ணிப்பறத்தலைப் போரில் சோழன் கரிகாலன் வென்றான். சேரமான் தோற்றான். அப்பகுதியிலேயே சேரன் பெருஞ்சேரலாதன் தன் தோல்வியால் நொந்து மனம் வெட்கி தன்னை வடக்கிருந்து மாய்த்துக் கொண்டான். அது கவிஞரின் மனத்தில் ஆழப் பதிந்தது. எனவே, தான் சார்ந்த அரசனைப் பற்றி பாடாமல், தோல்வி அடைந்த அரசனின் மேன்மைகளைத் தன் அரசன் முன்னால் தைரியமாகப் பாடியவர். புகழ்ச்சி பொய்யாயிருக்கக் கூடாது என்று எண்ணி பாடல் இயற்றினார் இவர்.

வினாவிடை அமைப்பில் காவற்பெண்டு கவிதைகள் உள்ளன.

வெள்ளை மாளர் கவிதைகள் போரினின்று வீடு திரும்பிய வீரர்களின் வரவைப் பற்றியும் வராமல் விட்டுப் போய் தாமதமாய் வந்து ஊரடைந்த ஒரு வீரனைப் பற்றியதும் ஆகும். புண்களைப் பேய்கள் அண்டாதிருக்க வேப்பிலையை வீட்டின் முன் சொருகியும் பாடல்களைப் பாடியும் இருக்கும் தெருவில் ஒருவனுடைய தேர் தாமதமாக வர அவன் வீட்டு நிலை பற்றி கவலை கொண்டு பாடுகிறார் இவர்.

குறமகள் இளவெயினி, கவிதை படைக்க சாதி தடை இல்லை என்பதை உணர்த்தும் வகையில் அக் காலத்திலேயே கவிதை படைத்தவர்.

பாரி மகள் அங்கவை, சங்கவை இருவரின் கவிதை ஒன்றுதான். ஆனாலும் கூட அந்த ஒற்றைப் பாடல் இன்றளவும் பேசப்படும் பாடலான 'அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்' எனப்படுவது. அந்த நாளில் அப்பாவும் இருந்தார், சொத்தும் இருந்தது, இன்று ஏதுமற்று தந்தையுமற்று நிற்கும் தங்களின் அவலச் சுவையை மிக ஆழமாக பிழிந்து கொடுத்தவர்கள் இவர்கள். தந்தை மக்கள் பிரிவும் இன்பமும் துன்பமும் என்ற அடிப்படையில் இதைச் சார்ந்தும் இது போன்றும் இன்றளவும் பல பாடல்கள் வந்து கொண்டு இருக்கும் ஒரு முன் மாதிரியான பாடல் இது.

பூதப் பாண்டியன் தேவி பெருங்கோபெண்டு பாடலும் ஒன்று மட்டும்தான். கணவனை இழந்த பின் ஊரில் தான் மட்டும் கைம்மை நோன்பு ஏற்று வாழ்வதைக் காட்டிலும் தலைவனுடன் உடன் கட்டை ஏறி உயிர் மாய்த்துக்கொள்ள விரும்பிய பெண் இவர்.

பேய் மகள் இளவெளினி, அஞ்சி அத்தை மகள் நாகையார், குமிழ் ஞாழலார் நப்பசலையார், ஆதிமந்தியார் போன்று இன்னமும் 15 பெண்பாற் புலவர்கள் ஒரே ஒரு பாடல் இயற்றியிருந்தாலும் அந்தப் பாடல்கள் தனித்துவம் கொண்டும் காலத்தால் அழிக்க இயலாததாகவும் அமைந்துள்ளன. ஆதிமந்தியார் ஒரே பாடலில் தன் கணவனை வெள்ளத்தில் பறிகொடுத்து ஆட்டனத்தியைத் தேடி நீர் போகும் பாதை எங்கும் அலைந்தது, வருந்தியது, இன்றும் நடை பெறும் நிகழ்வுகள்தானே?

காமக்கனி பசலையார் எழுதிய ஒரே ஒரு பாடலில் ஆடவர், பொருள் தேட என்று நீண்ட நாட்கள் மனைவியை பிரிவதும், அதற்காக பசலை கொண்டு மனைவி பல நாட்கள் மருகுவதும்,இளமைக் காலத்தில் சந்தோஷம் கொள்ளாமல் பொருள் சேகரித்தலில் முக்கியத்துவம் கொண்ட ஆண் மகனை உளம் நொந்து சாடும் இவரது பாடல் இன்றும் பொருந்தும்தானே? அயல் நாட்டில் பொருளீட்ட என்று போகும் பல ஆண்கள், பெயரளவிற்கு திருமணம் முடித்து, பின் பெண்ணைத் தனித்து விட்டுச் செல்லும் நிலையை இன்று நகர, கிராமப் பெண்கள் பலரும் அனுபவிக்கின்றனர். பணம் மட்டும் வாழ்வாகாது என்று இருவரும் உணராத வரையில் இல்வாழ்க்கை சிறப்பாக எப்படி அமைய முடியும்? இளமை கழிந்து பின் கூடி வாழ்ந்து என்ன பயன்? இன்றைய நாட்களில் கப்பலில் வேலை செய்யும் கணவனைக் கொண்ட, வெளிநாட்டில் வேலை செய்யும் கணவனைக் கொண்ட பல பெண்கள் குடும்ப பாரம் முழுவதும் ஏற்று நடத்திக் களைத்துப் போவதை நாமும் பார்க்கிறோம்தானே..

(தொடரும்)

# ஆயுததாரிகளின் கைகளில் போர்!

**ரதன்**

ரஷ்யாவைச் சேர்ந்த வக்னர் என்ற தனியார் ராணுவ அமைப்பு (Wagner Group) அண்மையில் பிரபலமானது. அதன் பின்னர்தான் அரசுகள் மட்டுமல்ல தனியார்களும் ராணுவம் வைத்துள்ளார்கள் என்பதே பலருக்கும் தெரிய வந்தது. அதுவும் அரசுகளே அந்த தனியார் ராணுவ உதவியை பெற்றிருப்பதையும் அறிந்தோம். ஆனால், தனியார் ராணுவ நிறுவனங்களை அரசுகள் போர்க்களங்களில் பயன்படுத்துவது இன்று நேற்றல்ல பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கிவிட்டது. 1200களிலேயே ஐரோப்பாவில் நடைபெற்ற பல யுத்தங்களில் தனியார் ராணுவங்களும் போரிட்டுள்ளன.

வக்னர் இல்லாத அண்மை உதாரணம் ஒன்று...

நைஜீரியாவில் 2009லிருந்து 2015 வரை 'பொக்கோ ஹராம்' (Boko Haram) என்ற முஸ்லீம் தீவிரவாத அமைப்பு பல தாக்குதல்களை நடத்தியது. பாடசாலை மாணவிகளை பலாத்காரமாக கடத்தி பாலியல் துன்புறுத்தல்களை செய்ததுடன், அவர்களை அடிமைகவீளாகவும் மனைவிகளாகவும் நடத்தினார்கள்.

நைஜீரியா ராணுவத்தால் 'பொக்கோ ஹராம்' தீவிரவாதிகளை கட்டுப்படுத்த முடியவில்லை. ஆப்பிரிக்க பழமொழி ஒன்று உண்டு. 'யானைகள் சண்டையிடும் பொழுது, புற்கள் மிதிபட்டே அழியும்'. அதே போன்றே நைஜீரிய மக்கள், பொக்கோ ஹராமினால் அல்லல்பட்டார்கள்.

இந்நிலையில், நைஜீரிய அரசு தனியார் ராணுவ நிறுவனத்தின் உதவியை நாடியது. Mi-24 Hind Helicopter Gunships-Flying Tank ஆயுதங்களுடன் களமிறங்கியது தனியார் ராணுவம். ஒரு சில வாரங்களில் 'பொக்கோ ஹராம்' அமைப்பினர் கட்டுப்படுத்தப்பட்டனர். பொக்கோ ஹராம் முகாம்கள் அழிக்கப்பட்டன. ஆனாலும், கடத்தப்பட்ட 276 பாடசாலை மாணவிகளில் பலரை மீட்க முடியாமல் போய்விட்டது. இன்றும் 'பொக்கோ ஹராம்' அமைப்பினர் நைஜீரியாவிலும் நைஜீரியாவின் சுற்றுப்புற நாடுகளிலும் அவ்வப்போது தாக்குதல்களை மேற்கொள்கின்றனர்.

இதுபோல் பல நாடுகள் அண்மைக் காலங்களில் தனியார் ராணுவங்களை பயன்படுத்தியுள்ளன.

ஐரோப்பா போல் ரஷ்யாவிலும் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்த தனியார் ராணுவம் என்பது தொடங்கிவிட்டது. செர்கி சுகான்ஹின் (Sergey Sukhankin) என்பவர், தனது கட்டுரை ஒன்றில், ரஷ்யா - லிவோனியன் போரின் போது (1558-1583), சுவீடனின் தனியார் ராணுவத்தை (1598-1613) ரஷ்யா பயன்படுத்தியுள்ளதாக குறிப்பிடுகின்றார். செர்கி உட்பட பல மேற்கு சார்பு ஆய்வாளர்கள் சோவியத் யூனியன் காலத்திலும் ரஷ்யா தனியார் ராணுவ நிறுவனங்களை பயன்படுத்தியுள்ளது என குறிப்பிடுகின்றனர்.

உக்ரெய்ன் அரசியலில் செல்வாக்குடன் கூடிய மிகப் பெரிய செல்வந்தர், ஈகார் ஹொலமாஸ்கி. இவர் உக்ரெய்ன் - ரஷ்ய யுத்தத்தில் தனது உற்பத்தி நிறுவனங்களையும் சொத்துக்களையும் பாதுகாக்க தனியார் ராணுவ நிறுவனம் ஒன்றை ஈடுபடுத்தியுள்ளார்.

வக்னர் தனியார் ராணுவம் உருவாகிய முறையையே, தனியார் ராணுவங்கள் எவ்வாறு தோன்றி வளர்ச்சி பெறுகின்றன என்பதற்கு ஒரு உதாரணமாகக் கொள்ளலாம். வக்னர் ராணுவம் ரஷ்யாவால் உருவாக்கப்பட்ட ராணுவம்தான். வக்னர் ராணுவம் 2014இல் ஆரம்பிக்கப்பட்டது.

உக்ரெய்னின் கிழக்கில் டொன்பஸ் ரஷ்யர்கள் அதிகமாக வாழும் பகுதி. அங்கு தனிநாடு கோரி போராடிக் கொண்டிருந்தார்கள். போராளிகளுக்கு ரஷ்யாவால் நேரடியாக உதவி செய்ய முடியாமையால் இந்த தனியார் ராணுவத்தை களத்தில் இறக்கியது. இதே 2014இல் கிரீமியாவை ரஷ்யா மீள கைப்பற்றியது குறிப்பிடத்தக்கது.



வக்னர் ராணுவம் தலைவராக எவ்கேனி பிரிகோசின் உள்ளார். ஆரம்பத்தில் ஐயாயிரம் வீரர்களைக் கொண்டதாகவிருந்தது. இப்பொழுது சுமார் இருபத்தையாயிரம் வீரர்கள் உள்ளனர்.

ரஷ்ய அதிபர் புடினின் செயிண்ட்

பீட்டர்ஸ்-பர்க்கை பூர்விகமாகக் கொண்டவர்தான் யெவ்கெனி பிறிகோசன். 1979இல் திருட்டுக் குற்றத்துக்காக சுமார் பத்து வருடங்களுக்கு மேல் பிறிகோசன் சிறையிலிருந்தார். சிறைக் காலம் முடிந்த பின்னர் செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் கொட் டோக் கடைகளை ஆரம்பித்தார். இக் கடைகள் இவருக்கு அதிக லாபத்தை பெற்றுக்கொடுத்தன. பின்னர் அதி உயர் உணவகங்களை ஆரம்பித்தார். இவற்றில் ஒன்று நீவா நதியில் ஆடம்பர படகில் அமைக்கப்பட்ட உணவகம்.

New Island என்ற இவரது உணவகத்தில் புடின் தனது பிறந்த நாளை 2003இல் கொண்டாடினார். இதற்கு முன்பாக ஜப்பான் பிரதமர் 2000இல் செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் வந்த போது பிறிகோசனின் உணவகமே உணவு தயாரித்து பரிமாறியது. இவருக்கும் புடினுக்குமான நெருக்கம், மாஸ்கோ கிறெம்ளின் மாளிகைக்கு உணவு தயாரித்து விநியோகிக்கும் அளவு நெருக்கமானது. இவரை 'புடின் செஃப்' என்றே அழைப்பார்கள். பிறிகோசனுக்கு ராணுவம், பாடசாலைகள் போன்ற பலவற்றிக்கு உணவு தயாரித்து வழங்கும் ஒப்பந்தங்களை புடின் வழங்கியுள்ளார். பிறிகோசனின் நதியில் உலாவும் படகு உணவகத்தில், பல முக்கிய விருந்துகள் புடினால் நடத்தப்பட்டுள்ளன.

2022-2023காலப்பகுதியில் வக்னர் ராணுவத்துக்கு ரஷ்யா சுமார் ஒரு பில்லியன் டாலர்களை ராணுவ வீரர்களுக்குரிய சம்பளமாக வழங்கியுள்ளது.

வக்னர் ராணுவம் சிரியா, சூடான், மத்திய ஆப்பிரிக்க குடியரசு போன்ற நாடுகளிலும் செயலாற்றுகின்றார்கள். சிரியாவில் பிறிகோசனுக்கு சொந்தமாக ஒரு எண்ணெய் கிணறும் உண்டு. இது ஐ.எஸ்.ஐ.எஸ்.-ன் கட்டுப்பாட்டிலிருந்து வக்னர் ராணுவத்தால் கைப்பற்றப்பட்டது. மற்றும் பல எண்ணெய் கிணறுகளில் சுமார் 25 வீதமான பங்குகளை சிரியா வழங்கியுள்ளது.

சூடான், மத்திய ஆப்பிரிக்கக் குடியரசு (CAR) ஆகிய நாடுகளில் தங்கச் சுரங்கங்களை பாதுகாக்கும் வேலையையும் வக்னர் ராணுவம் செய்து வருகின்றது. இதனால் இவர்களுக்கு இந்த நாடுகள் சேவைக்கான சன்மானத்தையும் வழங்கி வருகின்றன. லிபிய உள்நாட்டு யுத்தத்தில் லிபிய ஜெனரல் ஹலீபா ஹப்ரலுடன் (Khalifa Haftar) இணைந்து சுமார் ஆயிரம் வக்னர் ராணுவத்தினர் சண்டையிட்டனர். ஆப்பிரிக்க நாடான மாலியில் முஸ்லீம் தீவிரவாதிகளுக்கு எதிராக மாலி அரச படைகளுடன் இணைந்து போரிட்டனர். தற்போதைய ரஷ்ய - உக்ரெய்ன் போரில் உக்ரெய்னின் Popasna, Severodonetsk ஆகிய நகரங்களை வக்னர் ராணுவத்தினர்தான் கைப்பற்றினர். இது போரின் ஆரம்ப காலங்களில் கைப்பற்றப்பட்ட நகரங்கள்.

வக்னர் என்பது நாசிகளின் இசைக் கோப்பாளர் பெயர். ஹிட்லரின் விருப்பத்துக்குரிய இசைக் கலைஞர் ரிச்சர்ட் வக்னரின் பெயரையே ராணுவத்தின் பெயராக யெவ்கெனி பிறிகோசன் சூட்டினார். ரிச்சர்ட் வக்னர் நாசிகளின் கொள்கைகளை அதிகம் நேசித்தவர்.

உக்ரெய்ன் போர் ஆரம்பமான பின்னர், பிறிகோசன், புடினிடம் கைதிகளையும் போரில் பங்குபற்றச் செய்வதற்கு அனுமதி பெற்றார். ஏற்கனவே சிறையில் பல ஆண்டுகள் இருந்தமையால் பிறிகோசனுக்கு கைதிகளுடன் இலகுவாக உரையாட முடிந்தது. "உங்களை கடவுளால் தான் சிறையிலிருந்து வெளியேற்ற முடியும். கடவுள் உங்கள் மரணத்திலியே உங்களுக்கு விடுதலை கொடுப்பார். ஆனால்,என்னால் உங்களுக்கு விடுதலை கொடுக்க முடியும். நீங்கள் உங்களது தாய் நாடான ரஷ்யாவிற்காக ஆறு மாதங்கள் போரிட்டால், நீங்கள் விடுதலையடைவீர்கள்" என கைதிகளுடன் உரையாடினார். அவர்களது மனோநிலையை நன்கு அறிந்திருந்தமையால் சுமார் இருபதினாயிரம் கைதிகளை ராணுவ வீரர்களாக மாற்றினார். இவர்களே உக்ரெய்னில் முன்னின்று சண்டையிடுபவர்கள்.

ரஷ்யாவின் பெயருக்கு களங்கம் விளைவிப்பவர்களையும் ரஷ்யாவின் எதிரிகளையும் அழிப்பதற்கும் வக்னர் ராணுவம் பயன்படுத்தப்பட்டது.

வக்னர் மட்டுமல்லாமல் மேலும் பல தனியார் ராணுவ நிறுவனங்களையும் ரஷ்யா போரில் பயன்படுத்தி வருகின்றது. RSB-Group, MAR, ATK-GROUP, Slavonic Corps Limited, Wagner Group, E.N.O.T. Corp, Cossacks ஆகியவை குறிப்பிடத்தக்கன. இதனால் ரஷ்யாவுக்கும் ஆபத்து வரலாம் என்பதால் Criminal Code of the Russian Federation: Art. 359 - Mercenarism73 Art. 208 - Establishing Illegal Armed Forces 74 சட்டத்தின் கீழ் இவை கண்காணிக்கப்படுகின்றன.

உக்ரெய்னில் மட்டும் 37 ரஷ்ய தனியார் ராணுவ நிறுவனங்கள் இயங்குவதாக Kyiv Post பத்திரிகை இவ்வருட ஏப்ரல் இதழில் குறிப்பிட்டுள்ளது. அவற்றில் சிலவற்றை பட்டியலிட்டுள்ளது. (பார்க்க: அட்டவணை). அந்த நிறுவனங்களுள் சிலவற்றிற்கு இணையத் தளங்களும் நிரந்தர முகவரியும் உள்ளன. இந்த நிறுவனங்களில் சில சிரியாவிலும் ரஷ்யாவிற்காக போரிட்டு வருகின்றன. மட்டுமல்லாமல் சுமார் முப்பது நாடுகளில் ரஷ்யாவிற்காக இவர்கள் செயல்பட்டு வருகின்றனர். இவர்கள் அடிப்படையில் ரஷ்யா ராணுவத்துடன் இணைந்தே செயல்பட்டு வருகின்றனர். அந்தந்த நாடுகளில் உளவு வேலைகளையும் செய்கின்றனர். இவர்கள் ரஷ்ய அரசினால் பயிற்றுவிக்கப்படுபவர்கள். இவற்றிற்கான நிதியையும் ரஷ்ய அரசே வழங்குகின்றது. ஆனால், வீரர்கள் ரஷ்யர்களாக மட்டுமே இருக்க வேண்டும். வக்னரின் தலைமையை எந்தவொரு ராணுவ அனுபவமற்ற யெவ்கெனி பிறிகோசன் ஏற்றுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.




உக்ரெய்ன் போரில் ரஷ்யாவுக்காக வக்னர் தனியார் ராணுவம் போரிடுவதைப் போல், உக்ரெய்னுக்காகவும் மேற்கு நாடுகளின் பல தனியார் ராணுவ நிறுவனங்கள் போரிடுகின்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கது The Mozart Group. பிரிட்டனில் இருந்தும் சில நிறுவனங்கள் இந்த போரில் பங்குபெற்றுள்ள தகவல் வெளியாகியுள்ளது.

வின்ட்மானும் அவரது சகோதரரும் உக்ரெய்னில் பிறந்து சிறுவயதில் அமெரிக்காவிற்கு புலம்பெயர்ந்து அமெரிக்க ராணுவத்தில் பணியாற்றியவர்கள். இவர்களது நிறுவனமே Vindman's group. இவர்கள் உக்ரெய்னுக்கு ராணுவ ஆலோசனைகள் உட்பட பயிற்சி போன்ற பல சேவைகளை வழங்குகின்றனர்.

பிளக்வோற்றர் நிறுவன நிறுவனர் எறிக் பிறின்ஸ், இவர் தனியார் ராணுவ நிறுவனமொன்றின் ஊடாக உக்ரெய்னில் போரிட விரும்புவதாக தெரிவித்திருந்தார். எனினும், இதனை அமெரிக்க அதிபர் பைடன் அரசு ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், ஜேர்மனியில் இருந்து வெளியாகும் Bild am Sonntag, Der Spiegel ஆகிய பத்திரிகைகள் பிளக்வோற்றர் நிறுவனத்தின் 400 வீரர்கள் உக்ரெய்ன் போரில் ஈடுபட்டுள்ளதாக செய்தி வெளியிட்டது. வாசிங்டன் அதை மறுத்துள்ளது.

கடந்த வருடம் பி.பி.சி. செய்தி ஒன்றை வெளியிட்டிருந்தது. அமெரிக்க தனியார் ராணுவ நிறுவனம் ஒன்று உக்ரெய்ன் போரில் பாதுகாப்பு முகவர் வேலைக்கான விளம்பரம் ஒன்றை வெளியிட்டிருந்தது. முகவருக்கான சம்பளம் ஒரு நாளைக்கு ஆயிரம் டாலரிலிருந்து 2000 டாலர். அத்துடன் ஊக்க சம்பளமும் வழங்கப்படும் என விளம்பரம் தெரிவித்ததாக பி.பி.சி. குறிப்பிட்டிருந்தது.

டொனால்ட் ட்ரம்ப், ஆப்கான் போரை தனியார் அமெரிக்க ராணுவத்திடம் கையளிக்க வேண்டும் எனக் கூறி வருவது குறிப்பிடத்தக்கது.

இனி வரும் காலங்களில் தனியார் ராணுவ நிறுவனங்களே அமெரிக்காவிற்காக போரிடலாம். ஈராக்கில் மட்டும் அமெரிக்க ராணுவ நிறுவனங்கள் புதிய போலிஸ் படை மற்றும் புதிய ராணுவ படைகள் உருவாக்கம், எண்ணெய்க் கிணறு பாதுகாப்பு, தலைநகர பாதுகாப்பு படை உருவாக்கம் போன்றவற்றிற்காக பல மில்லியன் டாலர்களை வருமானமாகப் பெற்றுள்ளன.

தைவானும் தனது பாதுகாப்பை உறுதிப்படுத்த அமெரிக்க தனியார் ராணுவ நிறுவனங்களை நாட ஆலோசனை செய்கின்றது.

அமெரிக்காவில் உருவாக்கப்பட்ட தனியார் ராணுவம் Blackwater. காலத்துக்கு காலம் வெவ்வேறு பெயர்களை பெற்றுக்கொண்ட இந்த ராணுவம் மத்திய கிழக்கு நாடுகளில் அமெரிக்க அரசின் பாதுகாப்புத் திட்டங்களுக்கு ஏற்ப செயல்பட்டன. வட கரோலினாவில் ஏழாயிரம் ஏக்கர் நிலப்பரப்பில் தங்களது ராணுவ வீரர்களுக்கான பயிற்சி நிலையத்தையும் அமைத்தார்கள். இவர்களுக்கு அமெரிக்க அரசு போஸ்னியா, ஆப்கானிஸ்தான், இஸ்ரேல் போன்ற நாடுகளில் செயலாற்ற ஒப்பந்தமிட்டது.

Triple Canopy, DynCorp போன்ற பல தனியார் ராணுவங்கள் அல்லது பாதுகாப்பு நிறுவனங்கள் அமெரிக்காவிற்காக கடமையாற்றியுள்ளன.

ஈராக், ஆப்கான் போன்ற நாடுகளில் அமெரிக்கா போரிட்டபோது போரில் பங்குபெற்ற ஒவ்வொரு

அமெரிக்க ராணுவ வீரருக்கும் இணையாக தனியார் ராணுவ வீரரும் கடமையாற்றினார். 2018இல் ஐம்பதாயிரம் தனியார் ஒப்பந்தக்காரர்கள் அமெரிக்க ராணுவத்துக்காக வேலை பார்த்தனர். இவர்களில் இருபதாயிரம் பேர் மட்டுமே அமெரிக்கர்கள்.

2010இல் 'Host Nation Trucking' என்ற ஒப்பந்தம் எட்டு அமெரிக்க போக்குவரத்து நிறுவனங்களுக்கு வழங்கப்பட்டது. மொத்த ஒப்பந்தத் தொகை 2.16 பில்லியன் டாலர்கள். ஆப்கானிஸ்தானில் உள்ள அமெரிக்க தளங்களுக்கு தேவையான பொருட்களை நேரடியாக விநியோகிக்க வேண்டும். போரின் தொடர்ச்சிக்கு இது அவசியமானது. ஆனால், இந்த எட்டு நிறுவனங்களும் ஆப்கான் நிறுவனங்களை வேலைக்கு அமர்த்தி அவர்களூடாகவே பொருட்களை விநியோகித்தார்கள். Warlord, Inc., என்ற காங்கிரஸ் விசாரணை அறிக்கை இது தொடர்பான விபரங்களை வெளியிட்டுள்ளது.

பிளக்வோட்டர் ராணுவம், 2007 செப்டம்பர் 17இல் ஈராக்கில் 17 அப்பாவி ஈராக்கியரை கொன்றனர். இச் சம்பவத்தில் அமெரிக்க அரசு மீது குற்றஞ் சாட்டப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. 2015இல் இக்கொலைகளில் ஈடுபட்ட நால்வருக்கு அமெரிக்காவால் தண்டனையும் வழங்கப்பட்டது. ஆனால், 2020 டிசம்பர் 22இல் அப்போதைய அமெரிக்க அதிபர் அனைவருக்கும் மன்னிப்பு வழங்கினார். இக் கொலைகளை The Nisour Square Massacre என அழைப்பார்கள்.

தனியார் ராணுவ அமைப்பை அரசுகள் ஏற்படுத்துவதற்கும் ஆதரிப்பதற்குமான பிரதான காரணம் தவறுகள் ஏதாவது ஏற்படின் அது தனியார் ராணுவத்தின் மீதே பழி ஏற்படும். அரசு காப்பாற்றப்பட்டுவிடும் என்பதற்காகத்தான்.

2005இல் அமெரிக்க கடற்படை வீரர்கள் 24 ஈராக்கியரை கொன்றனர். இதனை Haditha massacre என அழைப்பார்கள். ஒரு அதிகாரிக்கு மட்டுமே தண்டனை வழங்கப்பட்டது.

ஐக்கிய அரபு ராச்சியம் ரகசியமாக யேமன் நாட்டில் ஈரானின் அனுசரனையுடன் போரிட்ட கூதி (Houthis) தீவிரவாதிகளுக்கு எதிராக தனியார் ராணுவங்களை போரிடச் செய்தது. கொலம்பியா, பனாமா, எல் சல்வடோர், சிலே ஆகிய நாட்டின் நீண்ட கால அனுபவம் கொண்ட அதிகாரிகளின் தலைமையில் தனியார் ராணுவங்கள் யேமனில் போரிட்டன. இவ் அதிகாரிகள் தங்களது நாட்டில் போதை பொருள் சட்ட விரோத வியாபாரத்துக்கு எதிராக போரிட்டவர்கள். இவர்கள் தங்களது நாடுகளில் பெற்ற சம்பளத்தை விட நான்கு மடங்கு அதிக சம்பளத்தை ஐக்கிய அரபு ராச்சியத்தில் பெற்றார்கள். அதேநேரம், இவர்களுக்கு கிடைக்கும் சம்பளம், ஐக்கிய ராச்சியத்தில் அமெரிக்க தனியார் ராணுவ வீரர்களுக்கு கிடைக்கும் சம்பளத்தை விட மிக மிகக் குறைவு.

இதுபோல் சூடான், சாட், எரித்திரியாவைச் சேர்ந்த ஆப்பிரிக்க ராணுவ வீரர்கள் குறைந்த சம்பளத்தில் சவூதி அரேபியாவிற்காக யேமனில் போரிடுகின்றார்கள்.

கேர்டிஸானின் தலைநகரான ஏர்மிலில் (Irbil) பல நாடுகளிலிருந்து வந்த தனியார் ராணுவங்களை காணலாம். மத்திய கிழக்கிற்கான சந்தைப்படுத்தும் களமாக ஏர்மில் உள்ளது.

ஓஸ்பெக்கிஸ்தான் (Uzbekistan)-ஐ மையமாகக் கொண்ட தனியார் ராணுவ நிறுவனம் Malhama Tactical. இவர்கள் ஜிகாதிகளுக்காக சிரியாவில் போரிட்டுள்ளார்கள். சிரியா தனது நாட்டிற்காக போரிடும் தனியார் ராணுவ நிறுவனங்களுக்கு போரிடுவதற்கான சேவைக் கட்டணத்துடன், எண்ணெய் கிணறுகளில் சுமார் 25 வீதம் வரையிலான பங்குகளையும் வழங்குகின்றது.

அரசுகளைப் போல் தீவிரவாத அமைப்புகளும் தனியார் ராணுவங்களை வேலைக்கமர்த்தி போர்க் களங்களுக்கு அனுப்புகின்றனர். இன்று கடலில் ஆயுதம் மற்றும் முக்கிய பொருட்களை ஏற்றிவரும் கப்பல்கள் பாதுகாப்பாக கரையேறுவதற்கும் தனியார் ராணுவங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதே போல் அரசு சார்பற்ற நிறுவனங்கள் சமாதான படைகளாகவும் தனியார் ராணுவங்களை பயன்படுத்துகின்றனர். கடல், தரை, விமானம், கணணி ஆகிய களங்களில் தனியார் ராணுவங்கள் இயங்குகின்றன. இனி வரும் காலங்களில் இது அதிகரிக்கும் என கருதப்படுகின்றது.

இதுபோல் தனியார் ராணுவம் போரில் ஈடுபடுவதால் ஏற்படும் விளைவுகள் பல. பொதுவாக ராணுவ வீரர்கள் தங்களது நாட்டின் நலனில் அதிக அக்கறை கொண்டவர்களாக இருப்பார்கள். ஆனால், தனியார் ராணுவம் போரின் போதும் தங்களை சந்தைப்படுத்துவார்கள். வேறு பல நாடுகளும் இவர்களின் சேவையை நாடுவார்கள். மேலும், இவர்கள் தங்களை வணிக நிறுவனங்களாகவே கட்டமைத்துள்ளார்கள். DynCorp International, ArmorGroup உட்பட ஒரு சில நிறுவனங்களின் பங்குகள் பங்குச் சந்தையில் விற்கப்படுகின்றன. இந் நிறுவனங்கள் பெறும் லாபமே இவர்களை ஊக்கப்படுத்துகிறது.

1969இல் தென் ஆப்பிரிக்காவில் தோன்றிய Executive Outcomes நிறுவனம் ஆப்பிரிக்க கண்ட அரசுகளுக்காக போரிட்டது. இராணவ வீரர்களை ஒரு வருடத்துக்கு 40 மில்லியன் பெற்றுக்கொண்டு பயிற்றுவித்தார்கள். ருவண்டா படுகொலைகளின் போது, இவர்கள் ஐ.நா சபையிடம், 120 மில்லியன் டாலர்கள் தங்கள் நிறுவனத்துக்கு சேவைக் கட்டணமாகக் கொடுத்தால், தாங்கள் போரை நிறுத்தச் செய்வோம் எனக் கோரியது குறிப்பிடத்தக்கது.

ஐ.நா. சபை அப்போது மறுத்துவிட்டது. அப்போதைய ஐ.நா. செயலாளர் கோர்பி அண்ணன், "தனியார்மயப்படுத்தப்பட்ட அமைதிக்கு உலகம் தயாராக இல்லை" எனக் கூறினார். எட்டு லட்சம் மக்கள் கொல்லப்பட்டனர்.

லாபத்தை குறியாகக் கொண்டே தனியார் ராணுவ நிறுவனங்கள் இயங்குவதால் பல நாட்டு ராணுவ வீரர்களும் ஒரு போரில் ஈடுபடுவார்கள். அரசியல் நிலை மாற்றங்கள், சமாதானத்தை இவர்கள் கவனத்தில் கொள்ளமாட்டார்கள்.

தனியார் நிறுவன வீரர்களுக்கும் நிறுவன தலைமைக்கும் முரண்பாடுகள் ஏற்படின் எதிர்மறையான விளைவுகளும் ஏற்படும். ஒரு முக்கிய போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போதே, ரஷ்யாவில் வக்னர் ராணுவம் ரஷ்ய அரசையே கைப்பிடிக்க முயன்றது குறிப்பிடத்தக்கது.

இத்தனை அபாயம் இருந்தும் ஏன் அரசுகள் தனியார் ராணுவங்களை நாடுகின்றன?

ஒரு நாட்டின் ராணுவ வீரருக்கு ஆகக் குறைந்த கல்வி, உடற்பயிற்சி தகுதிகள் வேண்டும். வீரர்கள் முறையாக பயிற்றுவிக்கப்பட வேண்டும். ஆனால், தனியார் ராணுவ வீரர்கள் அவ்வாறல்ல. தேவைக்கேற்ப சிறையையும் நாடுவார்கள். இவர்கள் மீது இலகுவாக குற்றஞ்சாட்டலாம். ராணுவத்துக்கான செலவை விட தனியார் நிறுவனங்களுக்கான செலவு குறைவு. லாபத்தை குறியாக கொண்டு இயங்குவதனால், குறிக்கோளை விரைவில் வென்றெடுப்பார்கள். தனியார் ராணுவம் என்பதனை விட ஆயுததாரிகள் என்பதே சரியான சொற்பதம்.

ஒரு ராணுவ வீரர் இறப்பின் அவருக்கான சம்பளக் கொடுப்பனவுகள், ஓய்வூதிய கொடுப்பனவுகள் எனச் செலவு அதிகம். தனியார் ஆயுததாரி இறந்தால், அதனை தனியார் நிறுவனமே கவனத்திற்கொள்ளும், அரசல்ல.

அதேநேரம், இதுவே தனியார் ஆயுததாரிகள் எதிர்கொள்ளும் முக்கிய பிரச்சினையுமாகும். இவர்கள் மீதான மனித உரிமை மீறல்களை யார் கவனத்திற்கொள்வது? போரின் போது இவர்கள் கைது செய்யப்பட்டால் யார் குரலெழுப்புவது? அமெரிக்க நிறுவனம் ஒன்றிற்காக ஈராக்கில் களத்தில் போரிடும் பிரேசில் நாட்டு ஆயுததாரி கைது செய்யப்பட்டால், அவரது விடுதலைக்காக பிரேசில் குரலெழுப்புமா அமெரிக்கா குரல் கொடுக்குமா?

அதே பிரேசில் வீரர் ஈராக்கிய மக்கள் சிலரை படுகொலை செய்தால், அவர் மீதான விசாரணையை யார் மேற்கொள்வார்கள்?

ஐ.நா. சபை தனியார் ஆயுததாரிகள் பற்றிய ஒரு சில சட்டங்களைக் கொண்டிருந்தாலும் சர்வதேச ரீதியாக இந் நிறுவனங்கள் சட்டமயப்படுத்தப்பட வேண்டும். இந் நிறுவனங்களுக்காக போரிடுபவர்களது உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும்.

வக்னர் தனியார் ராணுவ நிறுவனம் ரஷ்யாவுக்கு வெளியேயும் பல்வேறு நாடுகளில், அந்நாடுகளின் அரசுகளால் போர்களில் பயன்படுத்தப்பட்டதை பார்த்தோம். இந்நிலையில், இலங்கையிலும் வக்னர் ராணுவம் இயங்கியதாக 'பிரண்ட்லைன்' என்ற பத்திரிகையின் ஜூன் 26, 2023 இதழில் வெளியான கட்டுரை ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'பல்வேறு சிந்தனைக் குழுக்களின் பகுப்பாய்வின்படி, வாக்னர் ராணுவ குழு ஆசியாவிலும் செயலில் உள்ளது. இலங்கையில் பல PMCகள் வேலை செய்கின்றன, உக்ரெய்ன் ஆலோசகரான மோல்ஃபார் (Molfar) அறிக்கையில், வெளிநாட்டில் பணிபுரியும் 37 ரஷ்ய ராணுவ நிறுவனங்களின் பட்டியல் தெரிவிக்கப்பட்டுள்ளது. தனியார் புலனாய்வாளர்கள், இலங்கையில் PMCகளில் பணிபுரியும் ரஷ்ய ஆபரேட்டர்களுக்கு இடையேயான தொடர்புகளைக் கண்டறிந்துள்ளனர்' என அந்த கட்டுரையை எழுதிய டியூட்சே வெல்லே (Deutsche Welle) குறிப்பிடுகிறார்.

முள்ளிவாய்க்கால் போரின் முடிவில் இலங்கை அரச படைகளுடன் வக்னர் உட்பட பல தனியார் ராணுவங்கள் இணைந்து இயங்கியனவா என்ற கேள்வியை இந்த கட்டுரை எழுப்புகிறது. சாத்தியங்கள் இல்லை எனக் கூறவிடவும் முடியாது.

**ரதன்** <rathan100@gmail.com>

| Year | formed Private military companies |
|---|---|
| 1992 | Tsar's Wolves |
| 1998 | Anti-terrorist Eagle |
| 2002 | Russian Imperial Movement |
| 2005 | RSB Group |
| 2008 | PMC Global |
| 2011 | E.H.O.T, Vega (Vympel) |
| 2013 | Wagner, Slavic Corps |
| 2014 | MAR, Yastreb, ATK Group, Rusich, LLC CHOA "CHVK", PMC Black Sea, PMC Strazh |
| 2015 | Polite People, Byzantium |
| 2017 | ISIS Hunters (Al-Sayyad), Sewa Security Service, Andreyevesky Krest |
| 2018 | Patriot, Redoubt, Moran Security Group, Ferax, Shield |
| 2022 | Akhmat, Tiger Battalion, BARS-13 (Russian Legion), ODSSBr Veterans, PMC Tavrida (Tavrida Battalion), Berkut PMC, Zvezda PMC, Storm special forces |
| 2023 | Convoy, Gazprom, Private Military Medical Company |

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



## 20. தொலைவில் இணையும் தண்டவாளங்கள்

புணர்ச்சியின் நடுவே
உன்மத்தம் கொண்டாற்போலப் பின்புறத்தைப் பிசைவதை
நீலப் படங்களில் கற்றுக்கொண்டதாய்ச் சொன்னாய்.

இதழ்களிரண்டையும்
இறுக்கப் பொருத்தி
வேட்கை நதி வெள்ளம் நுரைக்க
முன்னேறிப் பொருதலை
இயல்பிலே வந்ததென்றாய்

திருமயத்தில்
தினமும் நீ
பார்க்கத் தேர்ந்தது
பற்றித் தழுவிக்கொண்டு
பல நிலைகளில்
பரவசத்தில் சமைந்திருந்த சிற்பங்களை.

மார்புக் குமிழைத் திருகியபடியே
மனங்கவர்ந்த பாடல் வரியை
முணுமுணுப்பவன்
இசையால்
உள்ளம் உடலோடு
ஒத்திசையும் தருணமிது என்பாய்.

உச்சத்தில் என் முகத்தை
அழுத்தி இருத்தும்போதான
அக்குள் வியர்வை நெடியைப்
பொறாமல்
நான் கண்மூடிச் சகித்திருப்பதைப்
பலகாலமாய்ச்



சுகிப்பின் உச்சமென்று
சுயமாய் நீயே
கற்பித்துக்கொண்டாய்.

## 21. தோற்ற மயக்கம்

தடதடத்துக் கடக்கிற மின்சார ரயிலின்
ஒலி அடங்குகிற
வேகத்தில்
ஓயும் சில இரவுகள்.

மாதாந்திர இலக்கை எட்டாததால்
உயரதிகாரி எகிறிய கோபத்தில் தணிந்தியங்கும்
பல தருணங்கள்.

அருந்தத் தொடங்கியதும்
தீர்கிற
காகிதக் குவளைத் தேநீராய்
முயங்கியும் முடியாத
சில யாமங்கள்.

பின் மதியமொன்றில்
வெறிகொண்டு விழுந்து
புடவைப் பூக்கள் கசங்க
களைத்துத் தவித்தது
முன்னாள் சிநேகிதியைப்
பார்த்துவிட்டு வந்ததால் இருக்கலாம்.

உனக்குப் பிடித்ததையே
நான் சமைக்கிறேன்.
இருவருக்கும் ரசனைகள் ஒன்றே
என்றபடி
எனது உடைகளைத் தேர்வதும்
நீயே.
இப்படித்தான்
எப்போதும்போல்
அவையனைத்தையும்
கலவியென்றே
எண்ணிக்கொண்டாய்!.

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# வேறு வழி

கார்த்திக் கிருபாகரன்

குறுகிப்போன பெரு நகர சாலைகளில் கொஞ்சம் கூட இடம் விடாமல் போட்டி போட்டு நகர்ந்தன வாகனங்கள். அதுவும் காலை ஏழரை மணிக்கே. ஒருபக்கம் சார சாரயாய் வட நாட்டு மக்கள் கூட்டம் அகதிகளை போல மூட்டை மூடுச்சுகளை சுமந்தவண்ணமாக ரயில் நிலையத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்தனர். வெளியே உள்ள பேருந்து நிழற்குடையில் வேலைக்கு செல்வோர், பள்ளிக்கு செல்லும் மாணவர்கள் என பலரும் நின்றபடி இருக்க, வேலைக்கு செல்வதற்காக காந்தியும் காத்திருந்தான். பனியன் கம்பெனியில் இயந்திர பணியாளர் வேலை. தினகூலி.

பத்து நிமிடத்திற்கு ஒரு பேருந்து வந்தது. ஆனால், ஏற்கெனவே கூட்டத்தில் வழிந்தபடி வரும் பேருந்துக்குள் முந்தியடித்து ஏறுவதற்குள் பாதி உயிர் போய்விடும். அப்படி ஏற முடியாமல் முதல் பேருந்தை காந்தி தவறவிட்டான். அடுத்த பேருந்தை கட்டாயம் பிடித்தால் தான் 8.30 மணிக்குள் கம்பெனிக்கு போய்விட முடியும். 8.30 மணிக்குள் சென்றால் தான், காத்திருந்து வருகை பதிவு இயந்திரத்தில் ரேகை வைத்துவிட்டு, உள்ளே இயந்திரத்தை துடைத்து, சரிபார்த்து, தேவையான எல்லா பொருள்களை எடுத்து வைத்து, 9 மணிக்கு வேலையை தொடங்க முடியும். இரவு 9 மணிக்கு வேலையை முடித்த பிறகு இயந்திரத்தை அணைத்து, பொருள்களை எல்லாம் எடுத்து வைத்துவிட்டு, 9.15 மணிக்கு வெளியே வந்து, மீண்டும் வரிசையில் காத்திருந்து, வருகை பதிவு இயந்திரத்தில் ரேகை வைத்து, நிறுவனத்தை விட்டு வெளியே வரும்போது 9.30 மணிக்கு மேல் ஆகியிருக்கும். பேருந்தை பிடித்து வீடு வந்து சேரும்போது 10.30.

தினமும் காலையில் 6 மணிக்கு எழுந்து கிளம்பினால் தான் 7.45 மணிக்கு பேருந்தை பிடித்து கம்பெனிக்குள் 8.30க்குள் நுழைய முடியும். மனைவி குழந்தைகளோட இரண்டு வார்த்தை பேசவோ, கொஞ்ச நேரம் டி.வி பார்க்கவோ, அக்கம்பக்கம் வீட்டு மனிதர்களை எட்டிப் பாக்கவோ, சொந்த பந்தங்களை சந்திக்கவோ, மிச்சம் இருக்கின்ற அந்த ஏழு மணி நேரத்துலதான் கழிக்கனும். இல்லையென்றால் விடுமுறை நாளில் தான் இவையெல்லாம்.



மதிய உணவு இடைவேளை ஒரு மணி நேரம். இயந்திரத்தை ஓட்டி உற்பத்தி டன் அளவு வைத்துதான் தின சம்பளம் நிர்ணயிக்கபடும்.

கம்பெனி வேலை நேரத்தில் செல்போன் உபயோகிக்க தடை உண்டு.

பலரும் மனதில் வெறுப்புடன், குடும்ப சூழல் மற்றும் வருமானத்திற்காக மட்டுமே இப்படி இறுக்கமான சட்டதிட்டம் உள்ள கம்பெனியில் வேலை செய்கின்றனர்கள்.

காந்தியின் அலைபேசி அழைப்பு மணி ஒலித்தது. எடுத்து பார்த்த போது பீமன் அழைப்பு விடுத்து கொண்டிருந்தான். சற்றே எரிச்சல் உண்டானது.

திருப்பூரில் உள்ள பல நிறுவன தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்துபோராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். வட மாநிலத்தவர்களுக்கு வேலை தருவதை கண்டித்தும் சம்பள உயர்வுக்காகவும் வேலை நேரத்தை குறைக்கவும் வலியுறுத்தி அவினாசி சாலை திடலில் போராட்டம். அதில் பீமனும் கலந்துள்ளான். காந்திக்கும் அழைப்பு விடுத்துள்ளான்.

“நாமல எப்படா வேலைய விட்டு தூக்கலான்னு காத்திருக்காங்க. அதனால போராட்டத்துக்கு நான் வரல, நீயும் போகாதீங்க” என்று பீமனை எச்சரித்து, போராட்டத்திற்கும் போகாமலே இருந்துவிட்டான்.

அரசாங்கம், 12 மணி நேர வேலைக்கு சட்டம் கொண்டு வர துடிக்கிறது. ஆனால், திருப்பூர் மற்றும் அதை சுற்றியுள்ள பல நிறுவனங்களில் இப்போதே 12 மணி நேர வேலை நேரம் தான் இருக்கிறது. கண்டித்து பலமுறை போராட்டம் நடத்தியும் எந்த பலனும் இல்லை. மக்கள் ஜப்பான் நாட்டை போல 12 மணி நேர வேலை செய்து பழகி கொண்டதுதான் மிச்சம்.

தூரத்தில் மெல்ல அசைந்தபடி ஒரு பேருந்து வந்து கொண்டிருந்தது. அதிலும் கூட்டம் தான். ஆனாலும், சட்டென்று ஏறுவதற்கு தயராக மக்கள் தயாராகினர். பேருந்து நின்றவுடன் அடித்து பிடித்து உள்ளே சென்று நின்றான். பேருந்தில் இருக்கும் கூட்டத்திற்கு வண்டி குடை சாய்வது போலவே இருந்தது.

“கியா பாய்! இப்புடி மூட்டையோட ஏறினா! நாங்க எப்புடி நிக்குறது?” என்று காய்கறி மூட்டையுடன் ஏறிய ஒருவரை தட்டு தடுமாறி தமிழில் சொல்லி திட்டினான் வடக்கன் ஒருவன்.



“புழைக்க வந்த நாயி? மூட்டைக்கும் சேர்த்து தான் டிக்கெட் எடுப்பேன். உனக்கு இடுச்சா நடந்து வாடா” என்று அவர் பதிலுக்கு சொல்ல, வாய் சண்டை உருவானது. நடத்துநர் சமாதானபடுத்த, வண்டி ஊர்ந்தபடியே நகர்ந்தது. பேருந்தில் கால்வாசி பேர் வடக்கன்களாக தான் இருந்தார்கள். காற்று கூட செல்ல முடியாத நெருக்கம். ஜன்னல் வழி வீசிய காற்றில் பீடா வாடையும் சேர்ந்தே வந்தது.

அரை மணி நேரம் கூட்ட நெரிசலில் சிக்கி ஒரு வழியாக கம்பெனி வந்து சேர்ந்தான் காந்தி. கம்பெனி நுழைவுவாயில் பல வட நாட்டு ஆட்கள் வேலை கேட்டு நின்றுகொண்டிருந்தார்ர்கள். அவர்களை கவனித்தபடியே வந்தான்.

கடந்த சில ஆண்டுகளில் பல கம்பெனிகளில் வடநாட்டு ஆட்களை வேலைக்கு அமர்த்துவது வழக்கமாகிவிட்டது. பத்திற்கும் அதிகமான ஆட்களைக் கூட ஒரு சிறு அறையில் தங்க வைத்து, எப்பவாவது அரிசி சோறு, தினமும் மூன்று வேளை சப்பாத்தியும் வேக வைத்த பருப்பும் உணவாக கொடுத்தால் போதும், வேலை நேரம் 12 மணி நேரம் என்றாலும், அதற்கு மேல் என்றாலும் துளியும் அசராமல் பணி செய்கிறார்கள்.

வருகை பதிவு இயந்திரத்தில் ரேகை வைக்க வரிசைக்கு சென்ற காந்தி, அங்கே பீமனும் வரிசையில் நின்று கொண்டிருப்பதை கவனித்தான்.

“பீமா! போன் பண்ணியிருந்த, நான் பஸ்ல கூட்டத்துல இருக்கவும் எடுக்க முடியல” என்று காந்தி சமாளித்தான்.

“ஹீம்.....” என்றபடி தலையாட்டினான் பீமன்.

ரேகை வைத்து விட்டு, நிறுவன உடை மாற்றும் அறைக்கு வந்தார்கள்.

பீமனின் மௌனம் காந்திக்கு ஆச்சரியமாகவும் அதிர்ச்சியாகவும் இருந்தது.

“பீமா....! ஏன்டா, அமைதியா இருக்க? போராட்டத்துக்கு போகல?” என்றான் காந்தி.

“நீ ஏன் வரல?” என்று திரும்ப கேட்டான் பீமன்.

“அது போராட்டத்துக்கு வந்தா சம்பளம் இல்ல. இரண்டு நாள் சம்பளம் இல்லன்னா நம்ம பாடு திண்டாட்டம் தானே! அதான் வரல” என்றான் காந்தி.

“அதே தான் எனக்கும். யாரோட ஒத்துழைப்பும் இல்ல. யாரும் வரல. வெறும் ஐம்பது பேர், நூறு பேரை வச்சுகிட்டு என்ன சாதிக்க முடியும்? இரண்டு நாள் கூட சமாளிக்க முடியலை. அதான் போராட்டத்தை விட்டு வேலைக்கு வந்துட்டேன். நான் மட்டும் இல்ல, போராட்டத்துல கலந்துகிட்ட நம்ம கம்பெனி சங்கர், தயா எல்லாரும் வேலைக்கு திரும்ப வந்துட்டோம்“ என்றான் பீமன்.

சட்டென்று நேரத்தை கவனித்த காந்தி, “சரி மதியம் பேசலாம். நான் கிளம்புறேன்” என்றபடி உள்ளே புரொடக்ஷன் வேலைக்கு சென்றான்.

“ஹீம்.... 24 மணி நேரமும் வேலை செய்யனும்னு கம்பெனி சொன்ன கூட, ‘சரின்னு’ செய்வான் போல. இவங்களுக்கும் சேர்த்துதான் போராட்டுறோம். கலந்துக்கவரலன்னாலும், உதவி செய்யவோ அனுதாப படவோ தோனுதா? என்ன ஜென்மமோ!” என நினைத்தபடி பீமனும் புரொடக்ஷன் பகுதிக்கு வந்த போது, அவன் வேலை செய்யும் பகுதியில் வேறு ஒருவன் வேலை பார்த்து கொண்டிருந்தான்.

அவனை பார்த்து அதிர்ச்சியான பீமன்.

உள்ளே வந்து பீமனை கவனித்த பிளான்ட் சூப்பர்வைசர் நிசார், “பீமா.... என்ன இந்த பக்கம்? நீ இங்க வந்தா! உனக்கு பாக்கி பணத்தை குடுத்து செட்டில் பண்ணி, இனி வேலைக்கு வர வேணாம்னு மேனேஜர் சொல்ல சொன்னாரு” என்றார்.

“சார்... சார்... ஏன் சார்?” என பீமன் கெஞ்ச, போராட்டத்திற்கு போன மற்ற ஆட்களும் வந்து நின்று கெஞ்சினார்கள்.

“நீங்கதான் கோஷ்டி சேர்த்து போராட்டமெல்லாம் பண்ணுறீங்க. அதான் போராட்டத்துக்கு போன 30 பேரையும் வேலைய விட்டு தூக்கிட்டாங்க” என்று

சொல்லியபடி சென்றார் நிசார்.

30 பேரும் ஆங்காங்கு செய்வதறியாமல் திகைத்து நின்றார்கள். பீமன் வேலை போய்விட்டதை நினைத்து கலங்கியபடி, காந்தியையும் மற்றவர்களையும் பார்த்தான். காந்தி யாரையும் கவனிக்காமல், என்ன நடக்கிறது என்று கூட பொருட்படுத்தாமல் வேலை பார்த்தான். புதிதாக வேலைக்கு வந்த வடநாட்டுகாரர்கள் பம்பரம் போல வேகமாக வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

“இப்படி எது நடந்தாலும் கண்டுகாம இருக்கீங்களே !, நாளை உங்களுக்கும் இப்படி நடக்கும் போதுதான் வேதனை புரியும்“ என்று பீமன் நினைத்து கொண்டு இருந்தான்.

“வெளிய போங்க, இங்க நிக்காதீங்க..” என்று நிசார் விரட்ட, எல்லோரும் மேனேஜரை பார்க்க ஓடினார்கள்.

கூட்டம் வெளியே சென்றவுடன், “இன்னும் யாரும் போராட்டம், அது இதுன்னு போக விருப்பம் இருந்தா ! அப்புடியே போலாம். நீங்க இல்லன்னா, வேலை ஒன்னும் நின்னு போகாது. 24 மணி நேரம் கூட வேலை செய்ய ஆள் இருக்கு” என்று எச்சரித்தபடியே நிசார் சென்றார்.

இயந்திரத்தை ஓட்டியபடி, ஓரக்கண்ணால் சுற்றி ஒரு பார்வை பார்த்துவிட்டு, “போராட்டம் பண்ணி, அரசாங்கத்தையோ கம்பெனிகாரனையோ ஜெயிச்ச வரலாறு எங்க இருக்கு? அப்படியே போனாலும் நீதி கிடைக்காது. சோத்துக்கு வேறு வழி? பேசாம நம்ம வேலைய பார்ப்போம்“ என்று சலித்தபடி, எதுவும் நடக்காதது போல வேலையை பார்த்தான் காந்தி. ●

கார்த்திக் கிருபாகரன் <srinikarthi10693@gmail.com>


**அம்ருதா சந்தாதாரர் ஆகுங்கள்! இதழ் உங்கள் இல்லம் தேடி வரும்!!**

**சந்தாதாரர் ஆக மூன்று வழிகள்**

| இமெயில்: | அழைக்க | அஞ்சல் |
|---|---|---|
| info.amrudha@gmail.com | 044 24353555<br>9444070000 | அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035 |

| ☑ | காலம் | சந்தா தொகை (ரூ) |
|---|---|---|
| ☐ | ஆயுள் | 5000.00 |
| ☐ | ஐந்து வருடம் | 1300.00 |
| ☐ | இரண்டு வருடம் | 550.00 |
| ☐ | ஒரு வருடம் | 275.00 |

**சந்தா விண்ணப்பப் படிவம்**

உங்கள் காசோலை / வரைவோலையுடன் இந்தப் படிவத்தை அனுப்பவும்

பெயர்:..............................

முகவரி:..............................

..............................

..............................பின்கோடு:..............................

தொலைபேசி:..............................இ-மெயில்:..............................

காசோலை / வரைவோலை அனுப்புபவர்கள் White Lotus Books (P) Ltd என்ற பெயரில் அனுப்பவும்.

# அன்றும். இன்றும். என்றும்...
# உங்களுடன் ஸ்ரீராம்...





1975 இல் திரு. தியாகராஜன் தனது ஒரே மகளின் கல்யாண செலவு திட்டத்திற்கு மேல் அதிகரித்தது. பாக்கித் தொகைக்கு எங்கே செல்வது? மனைவியின் நகையை அடமானமோ, நிதியுதவியோ, வீட்டின் மீது கடனோ இதற்கெல்லாம் வழியில்லை. அவர் எப்படி சமாளித்தார்? ஏற்கனவே சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை ஏலத்தில் எடுத்து வெளி ஆதரவையோ, உதவியையோ நாட வேண்டிய அவசியமின்றித் தனது தேவைக்கான நிதியைப் பெற்றார்.

இன்று திருமதி. லதா முசிறியில் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார். ஸ்ரீராம் நிறுவனத்தில் ரூ.1 இலட்சம் நிதியுதவி பெற்று வியாபாரத்தில் முதலீடு செய்து நல்ல வருமானம் பெற்று ஸ்ரீராம் குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கிறார்.

1974 ஆம் ஆண்டு துவங்கப்பட்டு ஸ்ரீராம் சீட்டு நிறுவனம் ரூ.250 முதல் சிறிய தொகையில் சீட்டுக்களை தொடங்கி ஏழை எளிய மக்கள் தங்களின் வீடு, கல்வி, திருமணம் மற்றும் மருத்துவச் செலவு என பலவித தேவைகளைப் பூர்த்தி செய்ய கடந்த 40 வருடங்களாக, 4 தலைமுறைகளாக பெரும் பங்களித்துள்ளது. இன்று 50,000 ரூபாய் முதல் 50 இலட்சம் வரையிலான சீட்டுத் திட்டங்கள் மூலம் 700 கிளைகள், 12000 பணியாளர்கள், 80,000 முகவர்கள், ரூ.60000 கோடிக்கு மேல் பணம் வழங்கப்பட்டு, 40 இலட்சம் வளமான வாடிக்கையாளர்கள் என வளர்ச்சியடைந்துள்ளது.

இன்று இந்தியாவில் 80% லாரிகள் தனி நபர் வசமே உள்ளது. ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் இந்தியாவில் இயங்கும் லாரிகளில் 25% அளவிற்கு நிதியுதவி அளித்து ஓட்டுநர்களாக இருந்தவர்களை லாரி உரிமையாளராக உருவாக்கியுள்ளது. இதன் மூலம் 15 இலட்சம் பேர் பயனடைந்துள்ளனர். ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் கடந்த 40 வருடங்களாக லாரி உரிமையாளர்களுக்கு கடன் வழங்கி வருகிறது. இன்று லாரிக் கடன் வணிகம் (AUM) ரூ.55000 கோடி உள்ளது.

கடந்த 30 ஆண்டுகளாக ஸ்ரீராம் சிட்டி யூனியன் பைனான்ஸ் லிமிடெட் – குறு, சிறு மற்றும் நடுத்தர என தொழில் முனை வோருக்கு சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.2 இலட்சம் வரை நிதி வழங்கிள்ளது. இந்த சேவை 995 கிளைகள், 15,506 பணியாளர்கள் மூலமாக 23 இலட்சம் வாடிக்கையாளர்களுக்கு நிதியுதவி வழங்கப்பட்டு 14,937 கோடி ரூபாய் வணிகம் (AUM) உள்ளது.

ஸ்ரீராம் ஹவுசிங் பைனான்ஸ் லிமிடெட் நிறுவனம் தொடங்கப்பட்டு வீடு வாங்க கடன் சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.10.23 இலட்சம் என வழங்கப்பட்டுள்ளது. இந்த சேவை 47 கிளைகள், 259 பணியாளர்கள் மூலமாக செயல்பட்டு வருகிறது. இதுவரை 3000 வாடிக்கையாளர்களுக்கு ரூ.322.64 கோடி நிதியுதவி வழங்கப்பட்டுள்ளது.

தென் ஆப்பிரிக்காவின் மிகப் பெரிய காப்பீட்டு நிறுவனமான **SANLAM** னுடன் இணைந்து இந்தியாவில் ஸ்ரீராம் லைஃப் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 10,34,630 காப்பீடுகள் பெறப்பட்டு இழப்பீட்டு தொகை ரூ.87.26 கோடிகளும் மற்றும் **SANLAM**-ன் கிளைப் பிரிவாகிய **SANTAM** னுடன் இணைந்து ஸ்ரீராம் ஜெனரல் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 14,07,677 காப்பீடுகள் பெறப்பட்டு இது வரை இழப்பீட்டு தொகை ரூ.452.62 கோடிகள் வழங்கப்பட்டுள்ளது.

தொழில் முனைவோர்களை அதிகம் கொண்ட நாடு இந்தியா. அத்தகைய தொழில் முனைவோரை ஊக்குவித்து, நிதியளித்து, வருவாய் பெருகவும், வாழ்க்கைத் தரம் மேம்படவும் உதவுகிறோம். கடந்த 40 வருடங்களாக விஜயதசமி மற்றும் சித்திரை என இருமுறை நடைபெறும் சீட்டுத் திருவிழாவில் பங்கு கொண்டு உங்கள் தேவைகளுக்கு ஏற்ப திட்டங்களை தேர்ந்தெடுத்து பயனடைந்துள்ளீர்கள். இந்த இணக்கமான உறவு அன்றும், இன்றும், என்றும் தொடர்ந்து கொண்டே இருக்கும். மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**ஸ்ரீராம் சிட்ஸ்**

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6 • போன்: 4223 6000 www.shriramchits.com

WORDCRAFT



16 cm x 23 cm colour



# ஊழி நாடகம்

கவிதை & ஓவியம்
**வைதீஸ்வரன்**



வானம் மெல்ல
இதழ் விரிக்கிறது
புன்சிரிப்பு மென்னொளியாய்
வழிகிறது வெளியெங்கும்...

பூக்களும் புட்களும்
கண் விழித்து சிலிர்க்கின்றன.
காலக் காளைகள்
வெளியை ஓட்டி உழுகத் தொடங்குகிறது.
பல்லாயிரம் கோடி ஆண்டுகளாக
இதே ஆனந்தத்தின் நாடகத் திறப்பு
இதை தினம் தினம்
எழுதி அழித்து மீண்டும் எழுதும்
மகத்தான படைப்பாளி
ஊழிக்காலமாய்
மறைந்து நிற்கும்
மகாசக்தியின் மையிருட்டு!!

வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>

# நேர்த்தியன்

## பொ. கருணாகரமூர்த்தி

முகநூலில்தான் எங்கள் நட்பு ஆரம்பித்தது. என் வலைப்பக்கத்தில் நான் பதிந்தவை அனைத்தையும் அவள் படித்து வருகிறாள் என்பதில் எனக்கும் அவள் மேல் ஒரு `அது' வளர்ந்திருந்தது உண்மைதான். அதை எளிமையாக 'அபிமானம்' எனலாம். ஆனாலும், அதைப் பூரணமாக விளக்கவல்ல பிறிதொருசொல், வேறேதாவது மொழிகளில் ஒருவேளை இருக்கலாம். எனக்குத்தான் தெரியவில்லை.

சாஸ்திரிய இசை முதற்கொண்டு எனக்கு என்னவெல்லாம் பிடிக்குமோ அவையெல்லாம் பிலஹரிக்கும் பிடித்திருந்தன. அசப்பில் பாலுமகேந்திராவின் ஷோபா சாயலில் 'கிருதி பாட்'டென்று ஒரு இளம் கர்நாடக இசைப்பாடகி, ஸ்படிகக் குரலில் அசத்துகிறாரே கேட்டிருக்கிறீரோவென்று கேட்கையில், அவள் அப்போது கேட்டுக்கொண்டிருந்த 'கிருதி பாட்'டின் Gaana Kairaliயின் கச்சேரி சத்தத்தை மேலே வைத்து என்னை அசத்தினாள்.

அநேக தருணங்களில் எனக்கு இரண்டாம் ஜாமத்திலும் அவளுக்கு அலுவலக விடுமுறை நாட்களின் அதிகாலையிலுமாக நாம் பேசினோம், பேசினோம், வானத்தின் கீழகப்படும் அனைத்து விடயங்கள் பற்றியும் நிறையவே பேசினோம். அவளும் நிறைய வாசிப்பவளாக இருந்தாள். கிளாஸிக்கல் வகையிலான எழுத்துக்கள்; தென்னமெரிக்க, ரஷிய, ப்ரெஞ்ச், ஆஃபிரிக்கஇலக்கியங்களென்றாலும் இன்ன இன்ன எழுத்தாளர்களைத்தான் படிப்பதென்றில்லை, கிடைத்த எல்லோரையும் படிப்பவளாக இருந்தாள். சில கேள்விப்பட்டேயிராத எழுத்தாளர்களின் பெயர்களைச் சொன்னபோது நான் அசந்தே போனேன். பழகியவொரு நண்பரிடமோ புதிதாகப் பழகுபவரிடமோ என்னைப்பற்றிய பிம்பத்தை உயர்த்திக் கட்டமைக்க நான் பொய்களைக் கூறி வைப்பதில்லை. உண்மையில் எனக்கு அவர்களில் பலரைத் தெரியாதென்பதைச் சொல்லி வைத்தேன்.



இவள் என்னை மிகை மதிப்பீடு செய்து வைத்திருக்கிறாளோவென்று தோன்றும் போதெல்லாம் நானாகவே என்னைப் பற்றிய உண்மைகளைத் தெளிவாகச் சொல்லி வைத்திடுவேன். இந்த இரண்டு ஆண்டுகாலப் பழக்கத்திலும் என் எழுத்துகளுக்கு வெளியிலான எந்தத் தகவலையும் குடிசார் நிலை, குடும்பம், தொழில், வருமானம் என்று அவள் என்னிடமிருந்து பெற்றுக்கொள்ள முயன்றதில்லை. முகநூலின் சுயவிவரத்தில் இருந்த தகவல்களே போதுமானவையாக இருந்திருக்க வேண்டும். முகநூலில் நட்பாகச் சேர்த்துக்கொண்ட புதிதில் அவளது சுயவிவரத்தில் அவள் தர்மபுரி மாவட்டத்தில் ஒரு ஏற்றுமதிக் குழுமத்தில் கணக்கியல் துறையில் பணிபுரிவதாக இருந்தமாதிரியொரு சிறு ஞாபகம். தர்மபுரி என்றால் அங்கே ஔவையார் வாழ்ந்தார் என்பதைத் தவிர அம்மாநிலம் பற்றி எனக்கு வேறொன்றுந் தெரியாது.

பின் நாட்களில் சுயவிவரத்தை எவரும் பார்க்க முடியாதபடி பூட்டியிருந்தாள். அனாமதேயங்களிடமிருந்து பெண்களுக்கு சுயவிவரத் தகவல்களால் தொந்தரவுகள் இருப்பது தெரிந்ததுதான். அதனால் நானும் ஏன் எதுக்காகவென்று அவளை மேலே அதுபற்றி உசாவவில்லை.

இந்த ஆண்டின் ஆரம்பத்தில் நான் இந்தியாவுக்கு வரவிருப்பதாக முதலில் சொன்னபோது நான் தமாஷ் பண்ணுவதாகவே நினைத்தாளாம்.

என் கணவியோ தன் பதின்ம வயதிலேயே பெர்லினுக்கு வந்துவிட்டவளாகையால் அவளுக்கு இந்திய சுற்றுலாவில் அத்தனை நாட்டமில்லை. அவளது சகோதரியின் மகளுக்குக் கனடாவில் நடக்கவிருக்கும் திருமணத்துக்காகத் தன் விடுமுறை நாட்களைச் சேமித்துக் கொண்டிருந்தாள். பிள்ளைகளின் நீண்ட கல்லூரி விடுமுறைகள், நான் விடுமுறை களிக்கவிருந்த மாதத்தை விடவும் வேறாக இருந்தன.

நான் தனியாகத்தான் இந்திய விடுமுறையைக் களிக்கவிருந்தேன். முதல்வாரம் எப்படியும் சென்னைப் புத்தகச் சந்தையுடன் போய்விடும். இரண்டாம் வாரம் என் இலக்கிய நண்பர் செம்பருதி திருவண்ணாமலையில் தன்னுடன் கழிக்க வேண்டுமென்ற அவரது ஏற்பாட்டுக்கமையத் தன் பணிகளையும் சினிமா முயற்சிகளையும்



வகுத்துள்ளாராம். இன்னும் அவர் எடுக்கப்போகும் Anthology வகையிலான ஒருமணி நேரப்படத்துக்கான உருவாக்கத்தில் திரைக்கதை அமைப்பதில் தன்னுடன் 4 நாட்கள் தனியாகச் செலவழிக்க வேண்டுமென்றும் ஏலவே கேட்டுக்கொண்டுமுள்ளார்.

அவருடைய மலையாள இலக்கிய நண்பரொருவர் என் சில கதைகளை தன்னார்வத்தில் மலையாளத்தில் மொழிபெயர்க்க ஆரம்பித்திருந்தார். அவரும் நான் அவசியம் தன்னுடன் இரண்டு நாட்கள் போடனூரில் (கோயம்புத்தூர்) ஒரு கிராமத்தில் தங்கவேண்டுமென்றும் என் கதைகள் பற்றி மேலும் சில விளக்கங்களைத் தான் நேரில் கேட்டறிய வேண்டுமென்றும் கேட்டிருந்தார்.

பிலஹரி தான் இம்முறை சென்னைப் புத்தகச் சந்தைக்கு வரவில்லையென்றும், கடந்த இரண்டு சந்தையில் வாங்கியதில் 50க்கும் மேலானவை இன்னும் 'கன்னியாகவே இருக்கின்றன' என்றும் சொன்னாள்.

கண்காட்சி உங்களுக்கு ரொம்பத் தொலைவோ என்றதுக்கு, "உங்கள் நாட்டிலாயின் ஒரு 3 மணிநேர டிறைவ்; இங்கே எங்களுக்கு குறைந்தது 5 மணிநேரம் பிடிக்கும்" என்றுவிட்டு, "எவ்வளவு தொலைவென்றாலும் உங்கள் சுற்றுக்கள், காரியங்கள் எல்லாம் முடிந்தபின் எனக்கும் 2 நாட்களாவது ஒதுக்குங்கள், நான் உங்களைப் பார்க்கணுமே" என்றாள். அப்போதும் தன் ஊரைச் சொல்லவில்லை. நானே அவளிடம் போவதா, அல்லது அவள் என்னிடம் வருவாளா, அவள் வீட்டிலேயே தங்க வசதியுண்டா, நான் ஹொட்டல் முன்பதிவு செய்யணுமா என்பதெல்லாம் பேசாப்பொருளாக இருந்தன.

எனது ஆறு வார விடுமுறையில், முதல் இரண்டு வாரங்களையும் சென்னையிலும் விழுப்புரத்திலும்

கழித்துவிட்டுத்தான் திருவண்ணாமலைக்குப் போவேன் என்பதை நான் அவளுக்கு முதலிலேயே சொல்லியிருந்தேன். பிலஹரிக்கு என்னைச் விழுப்புரத்தில் சந்திப்பதெனில் அது பாதித் தொலைவுதான். ஏன் அப்போது சந்திக்க முயல / முடியவில்லை என்பதுவுந் தெரியவில்லை. அவளுக்கு அத்தருணம் ஏதோ அசௌகரியமானதாக இருந்திருக்கலாம்.

சென்னை வந்திறங்கியதும் நேரே தொடரியில் விழுப்புரம் போய் முன்பதிவு செய்திருந்த வாடிவீட்டில் நாலுநாட்கள் தங்கி, சிலகிராமங்களை தனியாவே சென்று சுற்றிப் பார்த்து, மதியச் சாப்பாடு சமைத்துக் கொடுத்த ஒரு அம்மா வீட்டுத் திண்ணையிலமர்ந்து நாட்டுக் கோழிக்கறியும் சோறும் சாப்பிட்டுவிட்டுத் திருவண்ணாமலைக்கு வந்துவிட்டேன்.

மேற்கத்தைய இசை பற்றிய பேச்சு எப்போது வந்தாலும் Johann Sebastian Bach-ஐப் பற்றி ஏதாவது சொல்லாமல் முடிக்கமாட்டாள். “நானும் கோதுமை வயலில் காற்றடிக்கையில் கதிர்களின் அலைகள் சாய்ந்தும் நிமிர்ந்தும் எழும்பியும் ஆடுவதைப்போலிருக்கும் Bach-இன் சில சிம்போனிகளை மட்டும் கேட்டிருக்கிறேன்; உம்மைப் போல் ஆழமாகத் தொடர்ந்து போனதில்லை” என்று சொல்லிவைத்தேன். வரும்போது அவளை ஆச்சரியப்படுத்துவதற்காக 18 செ.மீ உயரத்தில் மேசையில் வைக்கக்கூடிய வெண்பளிங்குக் கல்லினாலான Johann Sebastian Bach அரையுருவச் சிலை ஒன்றையும் ‘The Best of Bach’ எனும் 10 Compositions அடங்கிய MP3 Album ஒன்றையும் வாங்கிவந்தேன்.

செம்பருதியோ மிகவும் ‘முசு’வான மனிதன். ஒரு கல்லூரியில் பகுதி நேரமாகவோ / வருகைதரு ஆசிரியராகவோ ’நாட்டுப்புறவியலில்’ விரிவுரையும் செய்துகொண்டிருந்தார்.

அத்துடன் பதிப்புத்துறையிலும் ஈடுபாடுண்டு. ஏதோவொரு வெளியீட்டகத்துடன் ஒப்பந்தம் செய்துகொண்டு பதிப்பு வேலைகள் செய்துகொண்டிருக்கிறார். அதுபற்றி எதுவும் என்னுடன் விவரமாகப் பேசக்கூடிய சந்தர்ப்பம் இன்னும் அமையவில்லை. சினிமாவுக்கு கதை / திரைக்கதையென்று செய்துகொண்டிருந்தவர் இப்போது சினிமாவுக்குள் சில முற்போக்குப் பாத்திரங்களை ஏற்பதுபோன்று கால்களைச் சற்று ஆழமாக ஊன்றியிருந்தார். பட்ஜெட் படங்களைத் தயாரிப்பவர்களுக்கு ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வழங்குவது அவர் தன்னார்வ ஊழியங்கள்.

திருவண்ணாமலையில் ஒருநாள் அவருடனான மதிய உணவின்போது, “கொஞ்சம்... இருங்க தோழர். இந்தச் சகாவுகளோட உதில பொள்ளாச்சி வரை போய்விட்டு வந்திடுகிறேன்” என்றுவிட்டுப் புறப்பட்டார். அந்திசாய்ந்த பின்னாலும் ஆளைக் காணோம். தொலைபேசினால், “சாரி தோழர் அப்படியே சகாவுகளோட வண்டியில திருச்சூர் வரைக்கும் வந்திட்டோம்... எப்பிடியும் இரவுக்குள்ள அங்க வந்திடுவேன். உங்களை ஹன்னாவை நல்லபடி கவனிக்கச் சொல்லியிருக்கேன். ஒண்ணும் யோசிக்கவேணாம், நான் வந்திடுவேன்” என்றார்.

இந்த ஹன்னா யாரென்றும் சொல்லவேண்டும். இளங்கலை முடித்துவிட்டிருந்த பெண்ணொருத்தி. வாரத்தில் 3 - 4 நாட்கள் செம்பருதி வீட்டுக்கு வந்து அவருக்கு ஒரு தன்னார்வ உதவியாளரைப்போல, அவரது காரியங்களில் கைகொடுத்து உதவிக் கொண்டிருந்தாள். அவர் பதிப்பதற்காகத் தயார்படுத்தும் நூற்பிரதிகளை முதலாவது செம்மை நோக்குவது, பதிக்கப்படும் நூல்களுக்கான அட்டையை வடிவமைப்பு செய்வது, அவர்களது வீட்டையும் சிறிய அலுவலத்தையும் அடிக்கடி அங்கே வந்துபோகும் விருந்தினர்களுக்கான கட்டில் படுக்கைகளையும் சுத்தப்படுத்துவது, அவர்களது ஒரு பர்ணசாலையைப் போலத் திறந்திருந்த கூடத்துள் / மாலுக்குள் இருக்கும் பூக்கன்றுகளுக்கு நீரூற்றுவது, செம்பருதியின் கணவிக்கு சமையலறையில் பாத்திரங்கள் கோப்பைகள் கழுவிக்கொடுப்பது, காய்கறிகள் நறுக்கிக்கொடுப்பது, வீட்டுக்கு வருபவர்களுக்கு ஓயாது காப்பி டீ கொடுப்பதென்று அவளுக்கு அங்கே செய்வதற்கு நிறைய இருந்தன.

ஒருமுறை செம்பருதி அவள் வீட்டுக்குப் புறப்படும்போது, “இந்தா போன் ரீஃபில் பண்ணனும்னியே” என்றபடி அவளிடம் 3 நூறு ரூபா நோட்டுக்களைத் தந்தவர், இந்தா இதையுங்கூட பஸ்ஸுக்கு வைச்சுக்கோவென்று மேலும் 2 நூறு ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்தபோது அவள் வாங்கிக்கொண்டதைக் கண்டேன். அதைவிட மிக அதிகமாகக் அள்ளிக்கொடுப்பதற்கான பொருண்மிய வசதிகள் செம்பருதிக்கும் இல்லாவிட்டாலும் அவரது புரத்தலிலேயே இவளது ஜீவிதம் நகர்வதைப் புரிந்துகொண்டேன்.

செம்பருதியுடனான கதை உரையாடல்களில், சிக்கனமாக எந்தெந்தக் காட்சிகளை எங்கெங்கே எடுக்கலாம் போன்ற ஆலோசனைகளிலும் ஆர்வத்துடன் ஒருபயில்முறை மாணவியைப்போலக் கலந்துகொண்டு, தன் கருத்துக்களைப் பகிர்ந்துகொள்வாள்.

மழையோ வெயிலோ எப்போதும் வசதியாக ஜீன்ஸ் டீ-ஷேர்ட் அணியத்தான் விருப்பம். நன்கு வெளிறிப்போன அங்கங்கேதசைகள் எட்டிப்பார்க்கும் ஜீன்ஸில்த்தான் வருவாள். எப்போதாவதொருநாள் ‘ஜிகினா’ / சித்திரத் தையல் வேலைப்பாடுகளற்ற பருத்தித் துணியிலான பஞ்சாபி தொளதொளா பிஜாமா அணிந்து வந்தாலும் எளிமையாக அதிலும் அழகாய்த்தானிருப்பாள். தினமும் மஞ்சள் பூசிக் குளிப்பாளோ என்னமோ, எப்போதோ வந்த சின்னமுத்து அங்கங்கே விட்டுப்போன தழும்புகளும் அவளது பளிச்சென்ற மாநிறமுகத்துக்கு

மேலும் களையூட்டின. அவளது அப்பா பாரவுந்து ஓட்டுகிறாராம். பாரவுந்துக்கு சரக்குக் கிடைத்து அதை அவர் எடுத்துச்செல்லும் நாட்களில் மட்டும் சம்பளம் கிடைக்கும் என்று செம்பருதி சொல்லியிருந்தார். அத்துடன் அவரும் பாரவுந்துச் சாரதிகளுக்கான தொழிற்சங்கத்தின் செயற்பாடுகளில் ஆர்வமுடைய மனிதனாக இருப்பதால் தன் குடும்பத்தைவிட அவர் தன் சகாவுகளின் நலனிலேயே அக்கறைகொண்டு தனக்கு வரும் ஓட்டங்களையும் சகாவுகளுக்கு விட்டுக்கொடுத்து விடுவாராம்.

இடையிடையே மலையாளம் கலந்து ஹன்னா பேசும் தமிழ் ரம்மியமாகவிருக்கும். அவளது அடர்த்தியான கருங்கேசத்தைப் பார்த்து நானும் அவள் மலையாளப்பெண்ணாகஇருப்பாளோவென்று அனுமானித்திருந்தது தப்பாயிருந்தது. அது பற்றிச் செம்பருதியிடங் கேட்டபோதே அவர் தெளிவுபடுத்தினார்:

“அட நீங்க ஒண்ணுசார், அவளுக்குத் தாய் நிஜத்திலேயும் தெலுங்குக்காரிதான், அப்பாதான் தமிழர். வீட்டில இப்போதும் சிலசமயம் தெலுங்குதான் பேசுவார்கள். படிச்சதும் இங்கிலிஷ் மீடியம்... தனியாக இந்தி வேறு படிச்சிருக்காள் அவளுக்கு வாயில் உச்சரிக்க எது இலகுவாக வருகுதோ அதை எடுத்து மிழற்றிவிடுவாள். நிஜத்தில் மலையாளம், தெலுங்கு, கன்னடம் என்றெல்லாம் பிரித்துப் பார்க்கத் தெரியாத அபேதவாதி அவள். தமிழ் கதைகள் படிக்குமளவுக்குப் புரியும். நீங்கள் வருகிறீர்கள் என்பது தெரிந்தவுடன் உங்கள் புத்தகங்கள் இரண்டை என்னிடமிருந்து எடுத்துப் போய்ப் படித்திருக்கிறாள் என்றால் பாருங்களேன்” என்றதும் எனக்கு அவள் மீதான `பிரியமும் அபிமானமும்' அதிகரித்தன.

செம்பருத்தியும் நான்கைந்து நூல்கள் எழுதியிருக்கிறார்தான்; அதற்கும் அப்பால் அவருக்குப் பெரும் இலக்கிய எழுத்துப் பரப்புக் கிடையாது. தன் எழுத்துக்களைப் பற்றி எப்போதும் அடக்கியே வாசிக்கத் தெரிந்த நல்லவொரு மனிதர். தனக்குப் பிடித்துப்போன தமிழிலக்கியப் படைப்புகளைச் சந்திக்கும் மாணவர்கள், இளைய சமூகத்தினரிடம் வியந்தும் மேற்கோள்காட்டியும் அவற்றைப் படிக்கும்படியும் ஊக்குவிப்பார்.

அதேபோல் இலக்கியர்களை உபசரிப்பதில் அவருக்கு நிகர் அவரே. திருவண்ணாமலைக்குப் போனீர்களாயின் நீங்கள் ஹொட்டல்கள் எதிலும் தங்கவே முடியாது. உங்கள் பயணவுறையை எடுத்துப்போய்த் தன் அலுவலகத்துள் வைத்துப்பூட்டியேவிடுவார். அதுவும் இப்போ இரண்டொரு எளிமையான சினிமாக்களில் அவர் தலைக் காட்டியபின்பு செம்பருதிக்கான ரசிகர் வட்டம் மெல்லமெல்ல அதிகரித்திருந்தது.

என்போன்ற அவரது நண்பர்களிடமும் சினிமாவுக்கு உதவி இயக்குனர்களாகிவிட அவரைத் தினமும் வலம் வந்துகொண்டிருந்த உதவியாளர்களிடமும் பலான பகிடிகள் எல்லாம் எடுத்துவிடக்கூடியவர். ஹன்னா அந்தப் பிராந்தியத்துக்குள் வந்துவிட்டாள் என்று அறிந்ததும் திடுப்பெனப் பேசுபொருளை ‘இடைக்காடர் சமாதி’, ‘நித்ய சைதன்ய யதி’, ‘பகவான் யோகிராம் சுரத்குமார்’ என்று மாற்றிச் சமர்த்துப் பிள்ளையாகிவிடுவார்.

அவருக்கு மாதத்தின் இறுதி வாரங்கள் இரண்டும் மங்களூரில் படப்பிடிப்பிருந்தது. பெங்களூர், மங்களூரெல்லாம் நான் ஏலவே பார்த்த இடங்கள்தான். இவ்விடைவெளியில் இன்னும் நிறைவேறாத நீண்டகாலக் கனவாயிருந்த ஹரித்துவார், வாரணாஸி, லக்னோ, ஜெய்ப்பூர் பயணத்தை இம்முறை நனவாக்கிவிடலாமோவெனும் யோசனை உள்ளூரப் பொறித்தது. இன்னுமொருவர்கூட வந்தால் இந்திவாலாக்களுடன் மல்லுக்கட்ட வேண்டியிருக்காது.

செம்பருதியின் வீடு ஒரு பர்ணசாலையைப் போல. வீடு முழுவதும் அரைச் சுவர்தான் கட்டியிருந்தது. அதன் மேலே மரத்திலான கிராதிகள் அமைக்கப்பட்டிருந்ததால் உள்ளே எப்போதும் போதிய வெளிச்சமும் காற்றும் வந்துகொண்டிருந்தன. வீட்டைச் சுற்றிப் பூராவும் பெயர்தெரியாத பூமரங்களும் விசிறி வாழையும் நடப்பட்டுப் பசுமையாக இருந்தது. பின் வளவில் ஒரு கிணறு சூரியவொளிக் கலங்களுடன் இணைக்கப்பட்ட நீரிறைக்கும் பம்பு தொட்டவுடன் சில்லென்ற நீரை அதிலிருந்து இறைத்துக் கொண்டிருந்தது. செம்பருதி தானே வடிவமைத்த வீடும் தோட்டமும் என்றார். அதேபோல அவர் ஊருக்குள் பலருக்கும் எளிமையான வீடுகளை வடிவமைத்துக் கொடுத்திருப்பதை என்னிடம் பீற்றவில்லை,

ஒருநாள் செம்பருதியுடனான இரவுச் சாப்பாட்டு மேசையில் உத்தரப்பிரதேசப் பக்கம் போய்வர ஒரு எண்ணமிருப்பதையும் பயணத்துக்கு கொஞ்சம் இந்தி தெரிந்த ஒரு கொம்பனியிருந்தால் நல்லாயிருக்குமென்பதையும் சொன்னேன். கொஞ் சமும் யோசிக்காமல் “இவள் ஹன்னாவைக் கூட்டிப் போங்களேன்” என்றார். நான் அவர் ‘பகடி’ பண்ணுவதாகவே நினைத்தேன்.

நான் பதில் பேசாது மௌனமாக இருக்கவும், “அவள் இந்தி தனியாகப் படிச்சிருக்காள்னு சொன்னேனே, ரொம்ப உதவிகரமாக இருப்பா தோழருக்கு” என்றார்.

“அவ சம்மதிப்பாளா... இன்னும் அவவீட்ல அனுமதிப்பாங்களா...”

“அவ ரொம்பச் சுதந்திரமான பொண்ணு சார். அவளை யாரும் அங்கே தடைசொல்லவோ கட்டுப்படுத்தவோ மாட்டாங்க. ரொம்ப முற்போக்கான குடும்பம்” என்றார் உறுதியாக.

“இருங்க வர்றேன்” என்றுவிட்டு அவளை சாமர்த்தியப் போனில் அழைத்துவிட்டு ஒலியை

ஏற்றிவைத்தார்.

"ஏம்மா... இந்த ஜெர்மன் சாருக்கு இரண்டு வாரம் வாரணாஸி ஜெய்பூருக்குப் போய்வாறதுக்கு ஒரு ட்ராவல் பார்ட்னர் வேணுமாம்... நீ கூடப்போறியா..."

அவள் ஒரு கிறீச்சிடலுடன், "ஓ... ஜ்ஜா, றியல்லி... ஐ ஆம் பிலெஸ்ட் டு ஹாவ் சச் எ கோல்டென் ஒப்பொசூனிட்டி, ஓ... மை கோஷ்" என்று கத்தியது எனக்கு ஸ்படிகமாகக் கேட்டது!

எனக்குத்தான் இப்போது உள்ளூரத் தயக்கமாக இருந்தது. 'யார் என்ன நினைப்பார்களோ, முதுகுக்குப் பின்னால் கதைப்பார்களோ' என்றபோது, "இங்கு எவனுக்கும் உங்களையோ ஹன்னாவைப் பற்றியோ எங்களைவிட அதிகமாகத் தெரியாது. எவனது அபிப்பிராயம் பற்றியும் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை சார்" என்றனர் செம்பருதியும் கணவியும் ஒரே குரலில்.

"அவள் வேணுன்னா வீட்டில எங்ககூட ஒரு சூட்டிங் லொகேஷன் பார்க்கப்போறோம்னுட்டுக் கிளம்பலாம். ஆனா நீங்க வேணுன்னா அப்புறமாய்க் கேட்டுப்பாருங்க. அவள். 'நான் தயாபரன் சார்கூட வாரணாஸிக்கும் ஜெய்ப்பூருக்கும் ஒரு டூர் போறேன்னுட்டுத்தான் வருவா', ஷி ஸ் சச் எ ஜெம் ஒஃப் வுமன்கைன்ட் சார்." இப்படியாகச் செம்பருதியின் பேச்சில் சாரும் தோழரும் கலந்துகட்டி வந்துகொண்டிருக்கும்.

ஒரு சிறிய பயணவுறைக்குள் கல்லூரிக்குப்போன காலத்தில் வாங்கியவையாக இருக்கலாம். இரண்டு ஜீன்ஸ்களும் மூன்று டீ-ஷேர்ட்டுகளும் ஒரு பஞ்சாபியோடு, ஒரு வெளிறிப்போன புல்-ஓவரையும் அடைத்து வைத்துக்கொண்டு வந்தாள்.

"ப்ளீஸ் அந்த புல்-ஓவரை மட்டும் விட்டுவிட்டு வாம்மா... நாம நல்லதாக உத்தரப்பிரதேசத்திலே வாங்கிப்போம்" என்றேன். சம்மதித்து அதைத் தொடரி நிலையத்திலேயே யாசித்துக் கொண்டிருந்த ஒரு பாட்டியிடம் கொடுத்துவிட்டு வந்தாள்.

சென்னையிலிருந்து தொடரி மூலம் வாரணாஸி இரண்டு நாட் பயணமாதாலால், நான் விமானத்தையே முதலில் விரும்பினேன்.

"சார்... நீங்க நிறைய்ய விமானப் பயணங்கள் செய்திருப்பீங்க, ட்ரெயின் சிக்கனமாயுமிருக்கும். அதோட நிறைய இடங்களைப் பார்க்கலாம்... நிறைய ஊர்களூடு பயணிக்கும் ஆனந்தம் விமானத்தில் கிடைக்கவே கிடைக்காது... ட்ரெயின் ட்றிப் உங்களுக்கு ஓகேன்னா எனக்கும் ஓகேதான்..." என்றாள்.

"உந்தச் சார் மோர் எல்லாத்தையும் இன்றைக்கே விட்டிடு."

"அப்போ நான் உங்களை எப்படிக் கூப்பிடலாம்."

"செம்பருதி சொல்றாப்பல தோழர்னோ... இல்லைத் தயாபரன்னே கூப்பிடு."

"இரண்டுமே... எனக்கு நெஞ்சில இடிக்கறாப்பல இருக்கு, மாமான்னு கூப்பிடவா" என்றுவிட்டென் முகத்தைப் பார்த்தாள்.

"உன் இஷ்டம்."

செம்பருதியின் தோழர்களில் ஒருவர் பணி செய்யும் பயண முகவர் நிலையம் மூலம் எம் தொடரிப் பயணச் சீட்டுக்கள் தாமதமின்றிக் கிடைத்தன.

ஏற்கெனவே அத்தொடரித் தடத்தில் பயணித்திருந்தவள் போல என்ன இடத்தில் என்ன நல்ல சாப்பாடு கிடைக்கும் என்பதைத் தெரிந்து வைத்துக்கொண்டு அவற்றையெல்லாம் வாங்கித் தந்தாள். அக்கறையான போஷிப்பில்லாவிடினும் ஆரோக்கியம் ததும்பும் உடல்வாகு. சாதா உருளைக்கிழங்குக் கூட்டுடனான பரோட்டா, பானிபூரி, சமோஸாவைக்கூட ரசித்து ருசித்துச் சாப்பிடுவாள். இன்னும் தணலில் வாட்டிய சோளப்பொத்தி, வெள்ளரிப் பிஞ்சுகள், சாத்துக்குடி, பப்பாளி, பலபெயர் தெரியாத பழங்களென நிறையவே வாங்கிச் சாப்பிட்டோம்.

வாரணாஸி அடைந்ததும் ஒரு ஹொட்டலில் நான் "இரண்டு அறைகள்" வேணுமென்றபோது அவளே முந்திக்கொண்டு பொருண்மியவாதியாக, "ஒரு அறை, இரண்டு கட்டில்களுடன் போதும்" என்றாள்.

எம் அறைக்குள் சென்றதும், "ஹன்னா உனக்குன் கன்னித் தன்மையையிட்டான பயமில்லையோ" என்றேன். என் தமிழ் புரியாததைப் போலப் பார்த்தாள், எளிமைப்படுத்தி, "Are you not afraid of your virginity" என்றேன்.

நேர்த்தியானதொரு ஓவியம்போல என்னை நேராகப் பார்த்தாள். அப்பார்வையை 'உண்டு' என்றோ 'இல்லை' என்றோ என்னால் பொருள்பிரிக்க முடியவில்லை. சற்றுக்கழித்து, "உங்களை மீறி ஒரு மெசையாவுக்கு அவசியமிருக்காது" என்றாள். இப்போது நினைத்தாலும் அந்தக் கேள்வி அனாவசியமாகவும் அபத்தமாகவும் 'ஏன்தான் அப்படிக் கேட்டேனோ' என்கிற வருத்தத்தையுந் தருகிறது.

வாரணாஸியில் இரண்டு நாட்கள் கழிந்தன. ஹொட்டல் அறையில் வெம்மை போதவில்லை என்றாள். அங்கிருந்து ஜெய்பூருக்குக் கிளம்பினோம், ஜெய்பூர் பழைய அரண்மனை ஒன்றை Rambagh Palace என்று ஹொட்டலாக்கியிருந்தார்கள். அறைகளின் படுக்கைகள், குளியலறைகள், சாப்பாடெல்லாம் ஒரு குறையுமற்று நேர்த்தியாக இருந்தன.

திருவண்ணாமலைக்குத் திரும்பியதும் எம்

உத்தரப்பிரதேசப் பயண அனுபவங்களைப் பிலஹரிக்கு மெசெஞ்சரில் சுருக்கமாக எழுதினேன்.

ஹன்னா தன்னைவிடவும் இளமையாயிருப்பதால் என் கொம்பனிக்கு அவளுக்கு நான் முதலிடம் தந்ததாக பிலஹரி நினைக்கலாம். ஆனால், யாரிடமும் அது அப்படியல்ல என்று நிரூபிப்பதோ நம்ப வைப்பதோ என் நோக்கமல்ல.

"நீங்கள் ஒரு நேர்த்திவாதி. அத்தகைய மனிதனுடன் விடுமுறையில் உல்லாசப் பயணம் அனுபவிப்பது எனக்கு ஒரு ரம்யமான அனுபவமாக இருந்திருக்கும். அது நிகழாதபோது எனக்கும் ஏமாற்றந்தான்! நானாக வலிந்து நானும் உங்களுடன் வாரணாஸிக்கு வரவா என்று கேட்க ஒரு பெண்ணாக என்னால் முடியவில்லை. நீங்கள் என்னை அழைப்பீர்கள் என்று மிகுந்த எதிர்பார்ப்புடன் இருந்தேன்."

"எனக்குங்கூட அப்படித்தானே... ஸ்நேகிதராக இருக்கிறோம் என்பதற்காக எங்கூட உல்லாசப் பயணம் வாரீங்களான்னு எப்படி அழைக்கலாம்னுதான் இருந்தது."

"இதில என்ன இருக்கு எனக்கு முடியவில்லேன்னாலோ, இஷ்டமில்லேன்னாலோ 'சாரி... முடியவில்லை' என்றிருக்கப் போகிறேன், அவ்வளவுதானே..."

"நீங்க இந்தியாவுக்கு வரப்போறேன்னப்பாகூட சும்மா தமாஷ் பண்ணுவதாகவே நினைத்தேன். நீங்க வாரணாஸிக்கெல்லாம் போகவிருக்கேன்னதைச் சொல்லியிருந்தாற்கூட நான் என்னைத் தயார்படுத்திக் கொண்டிருந்திருப்பேன்."

"நீங்கள் ஒரு ஜெர்மன்காரியாக இருந்தால் ஒருவேளை நானாகவே கேட்டிருந்திருப்பேன். நான் பிரமச்சாரியாக இருந்தப்போ பெர்லினில் Excelsior என்றொரு 3 நட்சத்திர உல்லாசப் பயணிகள் ஹொட்டலில் பணிசெய்து கொண்டிருந்தேன். என்னுடன் கூடப்பணிபுரிந்த நாலைந்து பெண்கள் என்னை ஸ்ரீலங்காவுக்குக் கூட்டிட்டுப் போறியான்னு கேட்டிருந்தார்கள். ஒன்று எனக்கு அப்போது ஜெர்மனியைவிட்டு வெளியேறினால் மீண்டும் ஜெர்மனிக்குள் நுழைய அனுமதிக்கும் வகையிலான 'வதிவிட அனுமதி' இருக்கவில்லை. இன்னும் அவர்களைச் ஸ்ரீலங்காவுக்கு ஒரு தேன்வதையைப்போலப் பக்குவமாக அலுங்காமல் நலுங்காமல் அழைத்துப் போயிருந்தாலும் என் பெற்றோருக்கும் சுற்றத்துக்கும் உறவுகளுக்கும் அவர்களை யாரென்று அறிமுகப்படுத்துவேன்? என் சங்கடத்தை அவர்களுக்குப் புரியவைக்க முடியாதிருந்தது."

"பிரியமான ஒரு நண்பருடன் உல்லாசப் பயணம் செய்வதை எந்தப் பொண்ணுதான் விரும்பமாட்டா... ஆனால், ஒரு பொண்ணு நேரடியாகக் கேட்டிடமாட்டா... ஒரு ஆண் உவந்தளித்தால் ஏத்துப்பா, உங்க 'கரிஸ்மா' எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு... நீங்கள் உலகத்தின் எந்தக் கோடிக்கு அழைத்திருந்தாலும் நான் உங்ககூட ஓடிப் பறந்து வந்திருப்பேன். ஒரு எழுத்தாளராக என்னை இன்னும் ஆழமாகப் புரிந்துகொள்ளுவீர்களென நினைத்திருந்தேன். உப்ஸ்ஸ்...!"

தமிழகத்தை விட்டுக் கிளம்பமுன், எடுத்துவந்த Johann Sebastian Bach-இன் அரை-உருவையும் இசைத் தட்டுக்களையும் செம்பருதியின் ஆலோசனையில் கூரியரில் அனுப்பிவைத்தேன். கிடைத்ததும் பாரிய நன்றியுடன் பதில் பகர்ந்திருந்தாள்.

ஆறுமாதங்கள் கழித்து பிலஹரி எனக்கு நிதானமாக எழுதிய மின்னஞ்சலொன்று கீழ்வருமாறு இருந்தது.

'நான் ஒரு மணமுறிவாளி (டிவோஸி). பெண்களுக்கான விடுதி ஒன்றில் வாழ்ந்துகொண்டிருந்தேன்.

நீங்கள் தமிழகம் வந்தவேளையில் எனக்கு ஒரு புதிய நபருடன் பழக்கமேற்பட்டு அப்போதுதான் அவனது அடுக்ககத்தில் அவனோடு சேர்ந்து வாழத் தொடங்கியிருந்திருந்தேன்.

நான் உங்கள்மீது சீரியஸான ஆர்வங்காட்டி வீட்டுக்கழைத்து உபசரித்து உங்களைத் தங்க வைத்திருந்தாலோ அல்லது உங்களோட வாரணாஸி, ஜெய்ப்பூருக்குக் கூட வந்திருந்தாலோ அவன் என்னமாதிரி அதை எடுத்துப்பான் என்று தெரியாமலிருந்தது. அந்த 'றிஸ்க்கான' பரிசோதனையைச் செய்துபார்க்கவும் தயங்கினேன். அவன் நடைமுறைக்கொவ்வாத பஞ்சாங்கமாகவும் தன் பிறின்ஸிப்பிள்களில் தளர்வில்லாத பிடிவாதக்காரனாகவும் இருந்தான். சகிக்கவில்லை. அப்படியானவங்ககூட எல்லாம் ஆயுள்பரியந்தம் ஜெயில்வாழ்க்கை வாழவா முடியும், அவனைத் தொடரமுடியலை என்பதை என் ஆற்றாமையால் இப்போது உங்களுக்கு அறியத் தருகின்றேன்.

இத்தகவல்கள் உங்களின் மனவமைதியைக் கீறிவிடுமானால் நான் உங்களுக்கு இந்த அஞ்சலையே அனுப்பவில்லை-யென்றிருக்கட்டும். இதை அடித்துவிட்டு என்னையும் பொறுத்தாற்றிவிடுங்கள்.

எம்மால் எதுவுஞ் செய்யமுடியாது. இன்னும் உலகம் ஆண்களின் எண்ணப்படி அவர்களின் கட்டுப்பாட்டில்தான் இயங்குகிறது. உங்கள் 'உணர்வோடு விளையாடும் பறவைகள்' படித்தேன். இன்னும் என்னை அது அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. உங்கள் நட்பு எனக்குப் பெறுமதியானது, இழந்துவிட முடியாதது. என்னுடன் என்றும்போலத் தொடர்பிலிருங்கள். என்னை மறந்துவிடாதீர்கள்!

பிரியமுடன் தங்கள்

பிலஹரி

பொ. கருணாகரமூர்த்தி <karunah08@yahoo.com>

# செங்கோட்டை பாஸ்ட் பாசெஞ்சர்

சந்தியா நடராஜன்

அப்போது 'மெட்ராஸ்' என்றுதான் இந்த மாநகருக்குப் பெயர். வள்ளலார் மட்டும் 'தருமமிகு சென்னை' என்று அவர் இங்கு வாழ்ந்த காலத்தில் பாடியிருக்கிறார். மற்றபடி மெட்ராஸ், சென்னை ஆனது 1996ஆம் ஆண்டில். இந்தப் பெயர் மாற்றம் குறித்த அறிவிப்பை 17-7-1996இல் அன்றைய முதல்வர் கலைஞர் மு.கருணாநிதி தமிழக சட்டசபையில் அறிவித்தார். ஆரூர்க்காரரின் அறி விப்புக்குப் பின் இந்த நகரத்து இளைஞர்கள் மெல்ல மெல்ல 'சென்னை பாய்ஸ்' ஆனார்கள்.

நான் மெட்ராஸில் வந்திறங்கியவன்; தற்போது சென்னைவாசியாக வாழ்ந்து வருகிறேன். இது 'தருமமிகு சென்னை' தான். சந்தேகமே இல்லை. ஆளற்றவர்களை ஆளாக்கியிருக்கிறது இந்த மாநகரம். ஊர் பேர் தெரியாமல் உள்ளே வந்தவர்களுக்கு உபகாரம் செய்து உச்சத்தில் உட்கார வைத்தது இந்த 'காஸ்மோபாலிட்டன் சிட்டி'.

பள்ளிப்படிப்பைப் பாதியிலே விட்டுவிட்டு, வீட்டுக்குத் தெரியாமல் ஓடி வந்தவர்கள் பலர். அவர்கள் அனைவருக்கும் வாழ வழிகாட்டியது இந்த நகரத்து வீதிகள். சினிமா சிலரை நாடறியச் செய்தது. சில்லறை வியாபாரம் செய்து பிழைத்தவர்கள் அவர்களது சொந்த மண்ணில் 'பிரமுகர்' ஆனார்கள்.

அரசியலுக்கு வந்தவர்கள் ஆதாயம் பெற்றார்கள். பணபலமும் பதவி சுகமும் பெறுமதில்களுக்குள் அவர்களது வாழ்விடங்களை உல்லாசபுரிகளாக்கித் தந்தன.



தருமமிகு சென்னையில் எல்லோருக்கும் வாழ வழி தெரிந்தது. சென்னை வந்தோரை வரவேற்றது. டீக்கடை என்றால் மலையாளிகள்; நிலபுலம், வணிகம் என்றால் தெலுங்கர்கள் என்றிருந்த மெட்ராஸ் மறைந்து, இன்றைய சென்னையில், வீட்டுக் காவலாளியிலிருந்து உடுப்பி ஓட்டல் வரையிலும் கட்டுமான தளங்கள் முதல் சிகை அலங்காரக் கூடங்கள் வரையிலும் இந்திக்காரர்கள் தமிழில் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அடுத்த சட்டமன்றத் தேர்தலில் சென்னை வாழ் வடபுல உழைப்பாளர்கள் பேரவை ஒன்று அமையலாம். ஓர் அசாமியாரோ ஒரு நேப்பாளியோ ஒரு பீகாரியோ தமிழக சட்டமன்ற உறுப்பினரானால் வியப்பதற்கில்லை. வந்தாரை வாழவைக்கும் பட்டணம் இது.

மெட்ராஸ் என்ற சொல் காதில் விழுந்தபோது எனக்குப் பத்து வயது இருக்கலாம். அப்போது நான் கிராமத்தில் படித்து வந்தேன். காவிரிப்-பூம்பட்டினம் என்றழைக்கப்படும் பூம்புகாரிலிருந்து 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள கீழப்பெரும்பள்ளம் என்ற ஊர்தான் எங்கள் பூர்வீக கிராமம். அங்கே எங்கள் பக்கத்து வீட்டுக்காரரான குஞ்சிதபாதம் என்கிற குஞ்சு பிள்ளை ஒரு நெல் வியாபாரி. எப்போதும் வீட்டின் முன்புறம் ஒரு பெரிய மரச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி உரத்த குரலில் வருவோர் போவோரிடம் பேசிக் கொண்டிருப்பார். அவர் ஏதோ கேஸ் விஷயமாக சென்னைக்கு பொய் வந்தவர் போல. அவரது சபைக்கு யாராவது வந்துவிட்டால் அவரது மெட்ராஸ் புராணம் ஆரம்பமாகும். கை ரிக்சாக்காரனின் மெட்ராஸ் பாஷையில் கொஞ்சம் பேசிக் காண்பிப்பார். கீதா கஃபே ஓட்டலில் சாம்பாரில் மிதக்கும் இட்லியை விட சாம்பாரைப் பருகிக் களிக்கும் மெட்ராஸ் கலாசார வரலாற்றைக் கேட்பவர் காது கொதிக்கச் சொல்லிக்கொண்டே போவார். இவரிடமிருந்துதான் மெட்ராஸ் என்ற சொல் மனத்தில் பிடிபட்டது.



மூர் மார்க்கெட், மெட்ராஸ்

முதன்முதலாக என் கண்கள் கண்ட மெட்ராஸின் அடையாளங்கள் அந்தக் காலத்து சினிமா டிக்கெட்டுகள்தான். என் தாய் மாமா அப்போது மெட்ராஸ் லா காலேஜில் படித்துக் கொண்டிருந்தார். அவர் ஊருக்கு வரும்போது அவர் விட்டுச் சென்ற காசினோ, பாரகன், கெயிட்டி தியேட்டர்களின் சினிமா டிக்கெட்டுகள் அலமாரியில் காணக் கிடைத்தன. அவை வண்ணமயமானவை. அவ்வப்போது குஞ்சு பிள்ளையின் மெட்ராஸ் புராணம் மட்டும் ஒலிச்சித்திரமாக ஒளித்துக் கொண்டிருக்கும். கீதா கஃபே உரிமையாளர் ஜெயராமய்யர் எங்கள் ஊரை அடுத்த கடற்கரை கிராமமான வணகிரி யிலிருந்து சென்னைக்குச் சென்று ‘செட்டில்’ ஆனவர் என்பார் குஞ்சுப்பிள்ளை. ஜெயராமய்யரும் தன்னைப்போல் நெல் வியாபாரம் செய்தவர் என்று தனது அந்தஸ்தையும் உயர்த்திக்கொண்டு கீதா கஃபேயின் வளர்ச்சி குறித்துப் பல கதைகள் திரித்துக் கொண்டிருப்பார். குஞ்சுப்பிள்ளையின் சகாக்கள் மேல் துண்டால் வாயைத் துடைத்தபடி பிள்ளையின் கதைகளில் மூழ்கித் திளைப்பார்கள்.

*1969* வாக்கில் கிராமத்திலிருந்து மாயவரம் என்ற நகரத்திற்கு வந்தேன். அங்கே ஆறாம் வகுப்பிலிருந்து எஸ்.எஸ்.எல்.சி வரை நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் படித்து வந்தேன். மாயவரம் ரயில்வே ஸ்டேஷனில்தான் முதன்முதலாக ரயிலைப் பார்த்தேன். ஒரு ஊருக்குச் செல்வதற்கு நன்னிலம் வரை ரயிலில் சென்றேன். ‘பேரளம் வடை’ விற்றார்கள். ஒரு வடை போதும் ஒரு வேளை உணவுக்கு. மாயவரம் வாழ்வுதான் மனிதர்களை நேசிக்கக் கற்றுக் கொடுத்தது. ஊர் சுற்றும் ஆசையை வளர்த்து எடுத்தது.

கல்லூரிக் காலத்தில்தான் ஊர் சுற்றும் சுதந்திரம் கிடைத்தது. டே எக்ஸ்பிரஸ் என்ற சோழன் எக்ஸ்பிரஸ் மூலம் தஞ்சைக்கும் திருச்சிக்கும் செல்ல ஆரம்பித்தேன்.

மெட்ராஸ் போவதற்கு மாயவரத்துக்காரர்களுக்கு உகந்த ரயிலாக செங்கோட்டை ஃபாஸ்ட் பாசஞ்சர் அமைந்தது. அந்த ரயில் எண் *110*. சென்னை எக்மோர் நிலையத்தை வந்தடையும் முதல் ரயில் இந்த ‘ஒன்டென்’. தகர டின்களில் வத்தல் வடாம் எடுத்துக்கொண்டு மெட்ராஸ் செல்வதில் அந்தக் காலத்து மனிதர்களுக்கு எந்தச் சின்னத்தனமும் இருப்பதாகத் தோன்றியதில்லை. கட்டுச்சோறு வாசனை இல்லாத கம்பார்ட்மெண்டுகள் அரிது. மாயவரம் ரயில்வே ஸ்டேஷன் ரிசர்வேஷன் கிளார்க் தன்னை ரயில்வே போர்டின் தலைவராகவே நினைத்துக்கொண்டு பணியாற்றுவார். அவரிடம் ஒரு கேள்விக்கு மேல் மறு கேள்வி கேட்டால் அவர் முகத்தில் அனல் வீசும். அரசவைக்குள் அத்துமீறி நுழைந்துவிட்ட குடிமகனைப்போல் அங்கு வரும் எளிய மனிதர்களிடம் நடந்துகொள்வார்.

இப்படிப்பட்ட சர்வ அதிகாரம் படைத்த ரிசர்வேஷன் கிளார்க் முன்பு நின்று முன்பதிவு செய்துகொண்டு நானும் சில நண்பர்களும் 'ஒன்டென்' ரயில் மூலம் மெட்ராசுக்குப் புறப்பட்டோம். அப்போது நான் கல்லூரியில் இளங்கலை முதலாமாண்டு மாணவன். பியூசி வரை என்னுடன் படித்த திருமால் மெட்ராஸ் கால்நடை மருத்துவக் கல்லூரியில் சேர்ந்திருந்தான். அவனது அழைப்பின் பேரில்தான் இந்த மெட்ராஸ் பயணம். இரவு முழுவதும் நங்கள் பார்க்கப்போகும் மாநகரத்தைப் பற்றிப் பலவிதமாகப் படம் வரைந்து பார்த்துக்கொண்டே இருந்தது. ஒன்றும் பெரிதாகப் பிடிபடவில்லை. விடியர்களைப் பொழுதில் ரயில் தாம்பரம் ரயில் நிலையம் வந்தடைந்தது. பிளாட்பாரத்தில் கும்பல் கும்பலாய் மனிதர்கள் தென்பட்டார்கள். நடையிலும் உடையிலும் வித்தியாசம் தெரிந்தது. மாநகரத்தின் வசீகர வாசனை நெஞ்சை நிறைத்தது. பிறகு கடந்துபோன எல்லா ஸ்டேஷன்களின் கட்சிகளும் தேவலோகக் காட்சிகளாகவே மனத்தில் பதிந்தன.

ஒன்டென் விடிவதற்கு முன்பே எழும்பூர் ரயில் நிலையத்தை வந்தடைந்தது. திருமால் என்னை வரவேற்று ரயில் நிலையத்தின் பின்புறம் வழியாகத் தினத்தந்தி அலுவலகத்தைக் கடந்து கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவர் விடுதிக்கு எங்களை அழைத்துச்சென்றான்.என் மனம்போட்டுவைத்திருந்த கோலம் ஒன்று. நான் அங்கே பார்த்த கோலம் வேறொன்று. திருமால் கொஞ்சம் கண்ணயர்ந்தான். என் கால்கள் ஓரிடத்தில் தரிக்கவில்லை. விடுதியின் சுற்றுச் சுவரைக் கடந்து வெளியே வந்தேன். காலாற நடந்தேன். ஒரு மலையாளத்தாரின் டீக்கடை கண்ணில் பட்டது. உள்ளே நுழைந்து அமர்ந்தேன். பட்டர் பிஸ்கட், கேக் என்று பலவிதமான தின்பண்டங்கள் கொண்ட ஒரு தட்டை என் முன் கொண்டு வந்து வைத்தார் கடைக்காரர். ஒரு டீ வேண்டுமென்றேன். தட்டிலிருந்து இரண்டு மூன்று பிஸ்கட்டுகளை எடுத்துச் சுவைத்தேன். தட்டில் மிச்சம் வைக்கலாமா கூடாதா என்று தெரியவில்லை. கேட்கவும் கூச்சம். சரி முடிந்தவரை சாப்பிடலாம் என்று மனத்தைத் தேற்றிக்கொண்டேன். நகரத்து நாகரீகங்களைக் கண்டறிவது எப்படி? கொஞ்சம் சிந்தித்துக் கொண்டிருக்கையில் கடைக்காரர் டீ கொண்டு வந்தார். "தட்டில் இருப்பவை போதுமா?" என்று மலையாளம் கலந்த தமிழில் கேட்டார். நான் ஒரு மாதிரித் தலை அசைத்தேன். அவர் மீதமிருந்த பிஸ்கட்டுகளுடன் தட்டை எடுத்துக்கொண்டு போய்விட்டார். எனது வெட்கமும் மன இறுக்கமும் ஒருவாறு தொலைந்துபோயின. ஒன்று தெளிவானது. "டீக்கடையில் ஒரு தட்டு நிறைய வைக்கும் பிஸ்கட்டுகளில் சாப்பிட்டவைக்கு மட்டுமே பணம் தர வேண்டும். மீதம் வைக்கலாம்" என்ற நகரத்தின் டீக்கடை நாகரீகம் அன்று முதன்முதலாக எனக்குத் தெரிய வந்தது.

நாயர்கள் அரபு நாடுகளுக்குப் போகத் துவங்கியபின் மாநகர டீக்கடைகளில் தோற்றமும் மாறிக்கொண்டே வருகிறது. திரைப்படங்களில்கூட நாயர் டீக்கடைகள் தொலைந்துபோய் தமிழர்கள் டீ ஆற்றிக் கொண்டிருக்க வடிவேலு அலப்பறை மையம் கொண்டிருக்கிறது.

2022இல் சென்னைத் தேநீர்க் கடைகளில் தம் டீ, மசாலா டீ, ஹனி லெமன் டீ, ஜிஞ்சர் டீ, இரானி டீ, ஜாஸ்மின் டீ, ஹெர்பல் டீ, கிறீன் டீ, ஹைபிஸ்கஸ் டீ என்று எண்ணற்ற டீ வகைகள் இறக்குமதியாகி நமது பர்ஸை காலி செய்து வருகின்றன. ஒரு கப் டீ முப்பது ரூபாயிலிருந்து இருநூறு ரூபாய் வரை விற்கப்படுகிறது. தேநீர்க்கடைகள் நகைக்கடைகள் போல ஒளி வெள்ளத்தில் மிதந்துகொண்டிருக்கின்றன. அங்கே நவீன உடை அணிந்து பெண்கள் பணிபுரிகிறார்கள். பாதசாரிகளுக்கு நடைபாதை டீக்கடைகள் இருக்கின்றன.

பிறகு சென்னையில் நான் போக வேண்டிய இடம் மூர் மார்க்கெட். திருமாலும் நானும் நடந்தே மூர் மார்க்கெட் சென்றோம். தூரம் பெரிதாகத் தெரியவில்லை. அங்குச் சென்று டேல் கார்னகியின் மூன்று முக்கியமான நூல்களை வாங்க வேண்டும் என்பதே எனது இலக்கு. கடல் போல விரிந்து கிடந்தன பழைய புத்தகக் கடைகள். தேடிச் சென்ற நூல்கள் எளிதில் கைவசமாகின. How to Win Friends and Influence People, How to Stop Worrying and Start Living, How to Make an Effective Public Speaking ஆகிய மூன்று நூல்களும் கிடைத்தவுடன் ஏதோ உலகத்தையே வென்றெடுத்துவிட்டது போன்ற உணர்வு என்னை மகிழ்ச்சியின் ஆழ்த்தியது. மேலும் பல ஆங்கில, தமிழ் நூல்களை வாங்கி குவித்து அவற்றை அள்ளிக்கொண்டு விடுதிக்குத் திரும்பினோம்.

மறுநாள் டூரிஸ்டு கைடு போல திருமால் மவுண்ட் ரோடு, மெரினா பீச், மியூசியம் என்று பல்வேறு இடங்களுக்கு கூட்டிச் சென்றான். வெயில் கொளுத்தியது. கண்ணில் பட்ட ஏ.சி வசதி கொண்ட கடைகளில் தேவை எதுவும் இல்லாமலேயே உள்ளே நுழைந்து எங்களை ஆசுவாசப்படுத்திக் கொண்டோம். பெரும்பாலும் காலண்டர்கள் உலாவந்த நகரத்துச் சாலைகளில் கால்நடையாகவே சுற்றி அலைந்தோம். அதிகபட்சம் பேருந்துகள் துணைக்குவந்தன. அலைந்து அயர்ந்த கால்களுடனும் மெட்ராஸை வியந்து விரிந்த கண்களுடனும் மீண்டும் செங்கோட்டை பாஸ்ட் பாசெஞ்சர் ரயிலேறி மாயவரம் திரும்பினேன். அதாவது எங்கள் மொழியில் 109 ட்ரெயின் என்னை ஊரில் கொண்டு சேர்த்தது.

தொடரும்

**சந்தியா நடராஜன்**
<sandhyapathippagam@gmail.com>

# கைதி #1056

இளங்கோ

Prisoner #1056: How I Survived War and Found Peace by Roy Ratnavel

Prisoner #1056 என்கின்ற இந்த சுயசரிதை நூலை இரண்டு பகுதிகளாகப் பிரித்துப் பார்க்கலாம். முதலாவது பகுதி ரோய் ரத்தினவேல் என்பவர் இலங்கையில் பெற்ற போர்க்கால வடுக்கள்; மற்றப் பகுதி கனடாவில் அவர் பெறுகின்ற அனுபவங்கள்.

**1. மனவடுக்களின் காலம்**

இலங்கையில் பிறந்த ரோய் ரத்தினவேல் போரின் நிமித்தம் அனுபவித்தவை மிகுந்த துயரமானவை. கொழும்பில் ரோய் பிறந்தாலும், நாட்டு நிலைமைகளால் ரோய் யாழ்ப்பாணத்து பருத்தித்துறைக்கு அவரது தாயாரோடும் தமையனோடும் அனுப்பப்படுகின்றார். தகப்பன் மட்டும் கொழும்பில் தங்கி வேலை பார்க்கின்றார். அதுவரையும் ரோயின் குடும்பத்தார் வாடகைக்கு கொழும்பில் இருக்கும் இடம் ஒரு இலங்கை இராணுவ கேர்ணலின் வீடாகும்.

ரோய் பருத்தித் துறையில் இருக்கும்போது, இலங்கை இராணுவத்தின் 'ஒபரேஷன் லிபரேஷன்' (1987) நடவடிக்கையின்போது பெற்றோரின் முன்னால் இராணுவத்தால் கைது செய்யப்படுகின்றார். அவ்வாறு கைது செய்யப்படும் ரோய் கப்பலின் மூலம் பூசா ஜெயிலுக்குக் கொண்டு செல்லப்படுகின்றார். கிட்டத்தட்ட 2700 பேர் தன்னைப் போல கைது செய்யப்பட்டு விலங்கோடு கப்பலில் இருந்து காலி நகரின் தெருக்களில் ஜெயிலுக்கு இழுத்துக் கொண்டு செல்லப்பட்டதாக ரோய் குறிப்பிடுகின்றார். அங்கே அவருக்குக் கொடுக்கப்படும் இலக்கமே 'கைதி #1056'.



கிட்டத்தட்ட 2 மாதங்கள் சிறைச்சாலைக்குள் சித்திரவதை செய்யப்பட்டுக் கொண்டிருக்கும் ரோய், அன்றைய பாதுகாப்புத் துறை அமைச்சரான லலித் அத்துலக்முதலியின் மனைவியான சிறிமணியைச் சந்திக்கின்றார். அவரிடம் சிறைப்பட்டிருக்கும் தனது நிலவரத்தை, தங்களின் குடும்பத்து நண்பரான கேர்ணல் பெர்னாண்டோவிற்குச் சொல்லும்படி கூறுகின்றார்.

கேர்ணல் பெர்னாண்டோ அதற்கு முதல் வருடம் (1986) அவரது மகன்களில் ஒருவரை புலிகளின் ஒட்டுசுட்டான் தாக்குதலில் இழந்திருக்கின்றார். எனினும், அதை ஒருபுறம் ஒதுக்கிவைத்து கேர்ணல் கொழும்பிலிருந்து 3 மணித்தியாலங்கள் பயணித்து காலிக்கு வந்து ரோயை சிறையிலிருந்தும் சித்திரவதைகளிலிருந்தும் மீட்கின்றார்.

யாழ் தீபகற்பகத்தைக் கைப்பற்றும் இலங்கை இராணுவத்தின் 'ஒபரேஷன் லிபரேஷன்' நடவடிக்கை இந்திய அரசின் தலையீட்டால் இடைநடுவில் நிறுத்தப்படுவதை நாம் அறிவோம். ரோய் ஜெயிலில் இருந்து வெளியே வரும்போது இலங்கை-இந்தியா உடன்படிக்கை கைச்சாத்தப்பட்டு விட்டது.

ரோயை இந்தக் கேர்ணல் சிறைச்சாலைக்குள் இருந்து காப்பாற்றியதுபோல, ரோயின் தகப்பனை 1983 இனப் படுகொலைகளின் போது சிங்களக் காடையர்களிடம் இருந்து அந்தக் கேர்ணலே காப்பாற்றி பத்திரமாக யாழ்ப்பாணத்துக்கும் அனுப்பி வைத்தவர். அத்தோடு ரோயின் தமையன் வீட்டைவிட்டு ஓடி (இங்கே வெளிப்படையாகச் சொல்லப்படாதபோதும் அவர் இயக்கம் ஒன்றில் சேர்ந்திருக்கக்கூடும்), 84களில் பூஸா முகாமில் சிறை வைக்கப்படுகின்றார். தன் சொற்கேளாது வீட்டை விட்டு ஓடிய மகன் என்பதால் ரோயின் தகப்பன் மூத்த மகனை சிறைக்கு வெளியே எடுக்க விரும்பவில்லை. அப்போதும் இந்த கேர்ணலே ரோயின்

தமையனை சிறைச்சாலையில் இருந்து வெளியே எடுக்கின்றார். அந்தத் தமையன் இந்தியாவுக்குப் படகில் போய், ஒரு மாதிரியாக டென்மார்க்கிற்கு 1986இல் சென்றுவிடுகின்றார்.

ரோய் தொடக்கத்திலிருந்தே புலிகளின் ஆதரவாளராக தன்னைக் காட்டிக் கொண்டாலும் ரோயின் தகப்பன் புலிகளை எதிர்ப்பவராகவே இருக்கின்றார். ஒருவகையில் அவர்கள் அஹிம்சை வழியில் எல்லாவற்றையும் தீர்க்க விரும்பிய முந்தைய ஒரு தலைமுறை எனச் சொல்லலாம். அத்துடன் புலிகள் ஏனைய இயக்கங்களைச் சகோதரப் படுகொலை செய்ததால் ரோயின் தகப்பனுக்குப் புலிகளைப் பிடிப்பதில்லை.

பூசா சிறைச்சாலையில் இருந்து வந்த ரோயை, பெற்றோர் தொடர்ந்து இலங்கைக்குள் வைத்திருக்க விரும்பவில்லை. அவரை ஏதேனும் நாட்டுக்கு பத்திரமாக அனுப்பிவிட விரும்புகின்றனர். ரோய் கனடா போவதற்கு தகப்பன் கனடா தூதரலாயத்துக்கு விண்ணப்பிக்கின்றார். ரோயிக்கு சித்திரவதை நடந்த சித்திரவதைகள் அவருக்கு எளிதாக விஸா கிடைத்துவிடச் செய்துவிடுகின்றன. ரோயை கனடா விஸாவுக்காய் நேர்காணல் செய்யும் கனடிய அதிகாரி, ரோயின் சித்திரவதை அடையாளங்களைக் காட்டச் சொல்கின்றார். அவர் தனது ஷேர்ட்டைக் கழற்றிக் காட்டுகின்றார்.

1988 ஏப்ரல் மாதத்தில் ரோய் கனடாவிற்கு புதிய வாழ்வைத் தொடங்க வருகின்றார். வந்த மூன்று நாட்களிலேயே இலங்கையில் இருந்து ஒரு பேரிடிச் செய்தியை அறிகின்றார். பருத்தித் துறையில் அவர்களின் வீட்டில் வைத்து ரோயின் தகப்பனை இந்திய இராணுவம் சுட்டுக் கொன்று விடுகின்றது. அடுத்த அறையை முன்னரே பூட்டிவிட்டதால் அதற்குள் இருந்த தாயார் எப்படியோ தப்பிவிடுகின்றார்.

சிறைச்சாலைக்குள் இலங்கை இராணுவத்தால் பெற்ற சித்திரவதைகளோடு, தகப்பனையும் இந்திய இராணுவத்துக்குப் பலிகொடுத்து ஒரு புதிய வாழ்வை, தனது மனவடுக்களுக்கோ சித்திரவதைகளுக்கோ, உரிய சிகிச்சையோ ஆலோசனைகளோ பெறாமல் கனடாவின் குதிரை போல நில்லாமல் ஓடும் கடின வாழ்வுக்குள் தன்னை உடனேயே நுழைத்துக் கொள்கின்றார் ரோய்.

250 பக்கங்கள் இருக்கும் இந்நூலில், இவை அனைத்தையும் 75 பக்கங்களுக்குள் ரோய் சொல்லிவிடுகின்றார். மிகுதிப் பக்கங்கள் கனடாவில் அவர் பெற்ற அனுபவங்களையும் விவரிப்பதாய் இருக்கின்றது.

**2. கனடாக் கனவு**

யாழில் தகப்பனின் இழப்போடு தவிப்போடு இருக்கும் தாயைக் கனடாவுக்கு அழைக்க ரோய் கடுமையாக உழைக்க வேண்டியிருக்கின்றது. பதினெட்டு வயதில் ஒரு பதின்மனாக கனடாவில் வந்திறங்கி, இங்குள்ள பாடசாலையில் கல்வியைத் தொடர்ந்தாலும் அதைக் கைவிட்டு தொழிற்சாலையொன்றில் பணியாளராகவும் அலுவலகங்களைச் சுத்திகரிப்பாளராகவும் அடுக்கங்களில் பாதுகாவலனாகவும் ஒரே நேரத்தில் பல்வேறு தொழில்களைச் செய்யத் தொடங்குகின்றார்.

இவ்வாறான அடிநிலை வேலைகளைச் செய்தால், தன்னால் ஒருபோதும் பொருளாதாரத்தில் முன்னேறவோ தாயைக் கனடாவுக்கு அழைக்கவோ முடியாது என்று உணர்ந்து, ஒரு நிரந்தர Office வேலையை ரோய் தேடத் தொடங்குகின்றார். எந்த அனுபவமோ உரிய ரெஸிமியோ இல்லாது, ஒரு முதலீட்டு நிறுவனத்தின் மெயில் ரூமில் ஒரு வேலையைப் பெற்றுக் கொள்கின்றார்.

இப்படி ஒரு அடிநிலைப் பணியாளராக வேலையைத் தொடங்கும் ரோய், எப்படி அந்த பல பில்லியன் மதிப்புள்ள நிறுவனத்தின் ஒரு பகுதிக்கு பிற்காலத்தில் Excutive Vice Presidentஆக ஆகின்றார் என்பதுதான் மிச்ச கதை.

ஒருவகையில் இது 'அமெரிக்கக் கனவு' போல ஒரு குடியேற்றவாதியின் 'கனடா கனவு' கதையெனச் சொல்லலாம்.

ரோயினது சித்திரவதை அனுபவங்கள், தகப்பனை இந்திய இராணுவம் பலியெடுப்பது என்பது மிகவும் துயரமான சம்பவங்கள். தகப்பனின் இறந்த உடலோடு தாய் பல மணித்தியாலங்கள் தனித்து இருந்தது, பின்னாட்களில் நிரந்தர உளவடுவாகி ஸ்கிரினோபோபியாவுக்குப் போய் கடினமான வாழ்வு வாழ்ந்து முடிந்த அந்தத் தாயாரின் அனுபவங்களையும் ஒரு கையறு நிலையிலே நாம் வாசிக்கின்றோம். ரோயையும் இந்தத் துயர நினைவுகளும் அவர் அனுபவித்த சித்திரவதைகளும் கோபக்கார ஒருவராக அவரை மாற்றி உளவியல் ஆலோசனைகளுக்குக் கொண்டு செல்வதையும் விளங்கிக் கொள்ளமுடிகின்றது.

தகப்பன் இறந்த துயரை வெளியில் பாயவிடாது தனக்குள் அடக்கிக் கொண்ட ரோய், கிட்டத்தட்ட 14 வருடங்களின் பின் (2002) பருத்தித்துறைக்குப் போய் தகப்பன் கொல்லப்பட்ட வீட்டை (அந்த வீட்டை ரோயின் தாய் கொஞ்சக் காலத்திலேயே வேறொருவருக்கு விற்றும் விடுகின்றார்) போய்ப் பார்த்து அங்கே மண்டியிட்டு தகப்பனுக்கு உரிய பிரியாவிடை கொடுத்த சில காலங்களின் பின்னரே, அவரால் நெஞ்சை அடைத்துக்கொண்டிருந்த இந்தத் துயர நினைவுகளிலிருந்து ஓரளவுக்கு விடைபெற முடிகின்றது.



### 3. இரு உலகுகளின் இணைவும் விரிசலும்

கனடாவுக்கு வந்தவுடன் ரோயும் எல்லா குடியேற்றவாதிகளைப் போல தத்தித்தத்தி மெதுவாகத்தான் மேலே ஏறி வேண்டியிருக்கின்றது. ஆனால், ரோயுக்கு நல்ல மனிதர்கள் விரைவில் அறிமுகமாவதும் அவரது காதலி அவருக்கு வேலை யில்லாத காலங்களில் உதவுவதும் போன்று நிகழ்வது விதிவிலக்கானது.இதுஎல்லா குடியேற்றவாதிகளுக்கும் எளிதில் சாத்தியமாவதில்லை. முக்கியமாக எல்லா ஆவணங்களையும் அடையாளமின்றி அழித்துவிட்டு அகதிகளாக வந்தவர்க்கு இது கனடாவில் எளிதாக நடப்பதுமில்லை.

ரோய் இது தனது சொந்த அனுபவமென மிகுதிக் கதைகளைச் சொல்லியிருந்தால் பரவா யில்லை. அதனோடு நிறுத்தாமல் கனடாவை ஒரு 'சொர்க்கபுரியாக' மட்டும் கட்டியமைக்கும்போதே வாசிக்கும் நமக்கு அவரோடு முரண் உரையாடலைத் தொடங்க வேண்டியிருக்கின்றது.

கனடா அவர் வேலை நிமித்தம், பரந்த தளத்தின் வெள்ளையினத்தவர்கள் நிரம்பியிருக்கும் இதன் மத்திய பகுதிகளுக்கும் சிற்றூர்களுக்கும் பயணித்ததால் ரோயின் அனுபவங்கள் ஒருவகையில் பெறுமதியானவைதான். எனினும் ரோயிற்குள் அவரையறியாமலே இங்குள்ள பல தமிழர்களைப் போன்றதொபுக்கடீர் என்றுதேசிய நீரோட்டத்துக்குள் குதிக்கும் கனடா வலதுசாரியினர் போன்ற'பெருமை' வந்துவிடுகின்றது. எப்போதும் இங்கு வெளியாகும் நாஷனல் போஸ்டையே வாசிப்பேன் என்று அவர் சொல்லும்போதே அவரின் அரசியல் எந்தப் பக்கம் போகின்றது என்பது விளங்குகின்றது. அதற்காய் மற்ற அரசியல் கட்சிகள் எல்லாம் சிறப்பானது

எனச் சொல்ல வரவில்லை.

இந்த நாடு ஒரு சிறந்த நாடு, நீங்கள் கடினமாக உழைத்தால் உங்களுக்குரிய தடைகளைத் தாண்டி (இனவாதம், நிற வித்தியாசம்) என்பவற்றைத் தாண்டி உங்கள் கனவுகளைச் சாத்தியப்படுத்தலாம் என்று தொடர்ந்து வலியுறுத்தும் கப்பிட்டலிஸ்களின் கனடாக் கனவையே ரோயும் வெவ்வேறு பகுதிகளில் ஒரே குரலில் ஒலித்தபடி இருக்கின்றார்.

உலகில் பல நாடுகளை விடவும் கனடா ஒரு சிறந்த நாடென்பதில் எனக்குக் கூட மாற்றுக் கருத்தில்லை. இலங்கையில் இருக்கும் பேசும் / எழுதும் / நடமாடும் சுதந்திரத்தை விட பன்மடங்கு சுதந்திரம் கனடாவில் இருப்பதை, ரோய் சொல்வதைப் போலவே நானும் உணர்கின்றேன் என்பதும் உண்மைதான். ரோய் - எல்லோருக்குள்ளும் இனவாதம் இருக்கின்றது, நமக்கும் சாதிப் பிரிவினைகள் இருக்கின்றது; எனவே, வெள்ளையர்களை மட்டும் இனவாதிகள் எனச் சொல்லி எங்கள் பிள்ளைகளை வளர்க்கக் கூடாது என்று எமக்கு வலியுறுத்திச் சொல்கின்றார். ஆனால், கனடா வாழ்வதற்கு நல்ல நாடென்றால், கனடாவில் இந்த வெள்ளையர்கள் இங்கிருக்கும் ஆதிக்குடிகளுக்கு என்ன செய்தார்கள் / செய்து கொண்டிருக்கின்றார்கள் என்பதைச் சொல்வதற்கும் நிறைய மினக்கெட்டிருக்க வேண்டும். அதைப் பற்றிய எந்த சிறு சலசலப்பையும் இந்த நூலில் நாம் வாசிக்கக் கிடைக்கவில்லை.

கனடா, அமெரிக்கா உள்ளிட்ட வட அமெரிக்கா நாடுகளில் நீண்டகாலமாய் Systemic And Structural Racism தனி மனிதர்களைப் பாதிக்கின்றது என்பதை ரோய் எளிதாய்க் கடந்து போகவும் செய்கின்றார். ரோய் கனடா வந்தபோது உணர்ந்த இனவாதச் சொற்களைத்தான், அவரின், இந்த நாட்டில் பிறந்த சொந்தப் பிள்ளையும் இப்போது கேட்கின்றது என்றால், இந்த நாடு ஏனின்னும் இவ்வாறான விடயங்களில் முன்னேறாமல் இருக்கின்றது என்றும் அவர் யோசிக்க வேண்டும் அல்லவா. ஆடைகளில் படும் அழுக்கைப் போல எளிதாக இவற்றைத் தட்டிக் கழித்து முன்னேறி விடவேண்டும் என்று ரோய் சொல்வது அநியாயமல்லவா?

இப்படிப் பார்ப்போம், நாளை இலங்கையில் பெரும்பான்மைச் சிங்களவர்கள், சிறுபான்மையினச் சமூகங்களான தமிழர்கள், முஸ்லிம்கள், மலையகத் தமிழர்கள் உள்ளிட்டவர்களோடு நல்லிணக்கம் செய்து நிம்மதியாக வாழ்கின்றார்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்படியெனில் சிங்கள் மக்கள் தமிழ் மக்கள் உள்ளிட்ட சிறுபான்மையினருக்குச் செய்த (ரோய் விவரித்தவை உட்பட) கடந்தகால வரலாற்றைச் சொல்லாமல், நினைவூட்டாமல் இலங்கை ஒரு சிறந்த நல்லிணக்க நாடு என்று நாளை சொன்னால் வரலாறு நம்மை மன்னிக்காது அல்லவா? அவ்வாறே கனடாவை அதன் சிறப்புக்களுக்காகப் போற்றும்போது அதற்குள் இருக்கும் கீழ்மைகளையும் சுட்டிக்காட்ட வேண்டும்.

அண்மையில் கூட ஆஃப்பிரிக்காவிலிருந்து வந்த அகதிகளை உரிய வசதிகள் இல்லாது தெருக்களில் வாழவிட்டு நாமும் இந்த அரசும் அவர்களுக்கு அவலத்தைச் செய்தற்கு நாம் வெட்கித் தலைகுனிய வேண்டுமல்லவா? ஆகவேதான் கனடா ஒரு சொர்க்கபுரி என மட்டும் கட்டமைப்பதில் நாம் கவனமாக இருக்க வேண்டும் எனச் சொல்கின்றேன். இந்த நூலைக்கூட ரோய் தனது அனுபவங்களோடு நிறுத்தியிருந்தால் நாம் இதையெல்லாம் பேசியிருக்க வேண்டியிருக்காது. கனடா ஒரு இனவாத நாடா, அப்படியா, இப்படியா என்று சில அத்தியாயங்களை பெரும்பான்மைக் கனடியர்களை உச்சி குளிரச் செய்ய எழுதியிருப்பதால்தான் நாம் அவர் எழுதிய 'கனடா அனுபவங்களை' இடைமறிக்க வேண்டியிருக்கின்றது.

ஓரிடத்தில் நான் மிகப்பெரும் விடுதலையை உணர்கின்றேன். அதைக் கனடா தந்திருக்கின்றது (i'm a free man) என்கின்றார். பிறகு இன்னொரு இடத்தில் கனடாவில் எப்போதும் நாம் போரிட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்கின்றார். போரிடுவதன் மூலமே நாம் வாழ்வின் அர்த்தத்தை விளங்கிக் கொள்ளலாம் எனவும் சொல்கின்றார். என் கேள்வி என்னவென்றால் ஒருவர் விடுதலை அடைந்தபின் எதற்காகப் போராட வேண்டும்? ஏதோ ஒரு தளை / விலங்கு இருப்பதால்தானே தொடர்ந்து நாம் போராட வேண்டியிருக்கும்? அப்படியெனில் பிறகு எப்படி ஒருவர் தன்னை விடுதலையானவராக உணர்கின்றேன் என்று எழுத முடியும்.

ரோயே, அவரது முப்பது வயதுக்குள் மியூட்சுவல் பண்ட்களில் முதலிட்டு மில்லியனர் ஆகிவிட்டேன் என்கின்றார். அதற்குப் பிறகு சில வருடங்களில் உலகப் பொருளாதார வீழ்ச்சியில் தனது வங்கிக் கணக்கு மைனஸுக்குப் போய்விட்டது என்றும் குறிப்பிடுகின்றார். அதனால் ஏற்பட்ட மனநெருக்கடிகளையும் வாழ்வாதாரச் சிக்கல்களையும் கூட விரிவாக விவரிக்கின்றார். மேலும் அவர் ஏணிப்படிகளில் ஒவ்வொரு உயரங்களை மேலே மேலே அடையும்போதும் பல்வேறு போராட்டங்களாலேயே அந்நிலைகளை அடைகின்றார். ஒருவகையில் பார்த்தால் எப்போதும் போராடிக் கொண்டே - பொருளாதாரம் உட்பட - பல விடயங்களில் ரோய் இருக்கின்றார். அப்படியெனில் இவர் கனடா தனக்குத் தந்த விடுதலை என்று சொல்வதன் அர்த்தம் என்ன?

இடைக்கிடையே புத்தர் இந்த வாழ்க்கையில் suffering தவிர்க்க முடியாது என்று சொன்னவர் என்றும் வாசிப்பவர்க்கு நினைவூட்டுகின்றார். புத்தர் sufferingஐ ரோய் சொல்லும் பொருளாதாரத்தை வைத்து மட்டும் சுருக்கிச் சொன்னவரில்லை. அவர் சொன்ன suffering, நாம் வயதாவது, நோயுறுவது, மரணமுறுவது என்ற விரிந்த தளத்தில் ஆகும். அந்த sufferingஐ நாம் ஒருபோதும் தவிர்க்க முடியாது, ஆனால்,

painஐ குறைக்க முடியும் என்றுதான் புத்தர் அவரடைந்த ஞானத்தின் மூலம் நமக்குப் போதிக்க விழைந்தார். அதில் ஒன்று பொருளாதாரம் / பணம் மட்டுமே வேண்டும் என்று கடைசிக்காலம் வரை ஓடியோடி நம் வாழ்வைத் தொலைக்காதிருப்பதும் கூட.




ரோய் ரத்தினவேல் என்ற பெயரோடு இந்த நூலைக் கேள்விப்பட்டபோது இந்தப் பெயரை எங்கேயோ முன்பு கேள்விப்பட்டிருக்கின்றேனோ என்ற யோசனை தோன்றியது. பின்னர் கொஞ்சம் தேடி / தோண்டிப் பார்த்ததில் இவர் இங்கிருக்கும் பலமான ஒருநிறுவனமான கனடிய தமிழ் காங்கிரஸின் உபதலைவராக இருந்திருக்கின்றார் என்பது புலப்பட்டது. அத்தோடு ஈழ இறுதி யுத்த காலத்தில் இனத்துவேசத்தோடு நமது போராட்டத்தைப் பற்றி எழுதிய நாஷனல் போஸ்டில் அக்கருத்துக்களை மறுத்து opinions columns எழுதவும் செய்திருக்கின்றார் என்பதையும் அறிய முடிந்தது.

கனடிய தமிழ் காங்கிரஸில் இருந்து, சில பொது அரங்குகளில் இலங்கை அரசுக்கு எதிராக இறுதி ஈழ யுத்தகாலத்தில் பேசியதால், இலங்கை அரசால் இலங்கைக்குச் செல்ல தடைசெய்யப்பட்ட சிலரில் இவரின் பெயரும் இருந்தது (இப்போதும் இருக்கின்றதா தெரியவில்லை). ரோயுக்கு உண்மையான பெயர் வேறொன்று. அதை இணையத்தில் தேடினால் கிடைக்கும். அவரே அந்தப் பெயரை இங்கே பதிவு செய்துமிருக்கின்றார் என்பது வேறுவிடயம். அவ்வாறு தன்னை இலங்கையரசு தடை செய்தது தனக்குப் பெருமை என்கின்றார். இலங்கை அரசுக்கும் நாட்டுப் பொருளாதாரத்தை உயர்த்துவதை விட யாரை நாட்டுக்குள் விடக்கூடாது என்பதுதான் பெரும் பிரச்சினையாக இருக்கிறது. இப்போது கனடிய அமைச்சராகிவிட்ட ஹரி ஆனந்தசங்கரிக்கும் இலங்கை செல்ல பயணத்தடையை அந்த அரசு நீண்டகாலமாக விதித்து வைத்திருக்கின்றது. வேறொன்றுமில்லை ஹரி தொடர்ச்சியாக இலங்கையரசு செய்த தமிழனப் படுகொலைகளைப் பற்றி பல்வேறு தளங்களில் பேசிக்கொண்டிருக்கின்றார் என்பது மட்டுமே இதற்குரிய காரணம்.

ரோயின் இந்தப் புத்தகத்தை யாருக்காவது வாசிக்கப் பரிந்துரைப்பேனா என்றால் நிச்சயம் செய்வேன் என்றே சொல்வேன். இதில் சொல்லப்பட்ட அனுபவங்கள் முக்கியமானவை. ஆனால், ஒரு தனி மனிதரின் அனுபவம் என்று மட்டுமே நினைத்து வாசியுங்கள் என்றே அவர்களுக்கு ஞாபகமூட்டுவேன். முக்கியமாக, கனடாவில் பிறந்த அடுத்த தலைமுறைப் பிள்ளைகளை, இலங்கையில் நடந்த போர் மற்றும் ஒருவர் தொடக்க காலங்களில் கனடாவில் பெற்ற பல்வகைப்பட்ட அனுபவங்களுக்காய் வாசிக்கப் பரிந்துரைப்பேன்.

கிட்டத்தட்ட என் நெருங்கிய உறவுகளின் ஒருவரின் வயதையொத்தவர் ரோய். ரோய் கனடாக்கு வந்து 'உயர்ந்தது' ஒருவகை என்றால், என் நெருங்கிய உறவுகளைப் போன்றவர்கள் உக்கிரேன் போன்ற கிழக்கு ஐரோப்பாப் பனிநாடுகளில் சிக்கி, கனடாவின் வடபகுதியில் ஆவணங்களின்றி அகதியாய் வந்திறங்கி, உரிய சாப்பாடில்லாது இரண்டு நாட்களாய் ரெயினில் பயணித்து குளிர்காலத்தில் ரொறொண்டோவில் வந்திறங்கியது என்று அவர்களுக்கும் சொல்ல வேறு விதமான கதைகள் இருக்கும். அவ்வாறு ஒவ்வொருவரின் கனடா வந்த கதையும் கனடாவில் அவர்கள் தத்தளித்து எழுந்த கதைகளும் இன்னமும் தத்தளித்துக் கொண்டிருக்கும் கதைகளுமென பல்லாயிரம் இருக்கும்.

ஒருவகையில் ரோய் இந்த நூலின் பிற்பகுதியில் நமக்குத் திணிக்கச் செய்வது, இந்தியா / இலங்கையில் தலித்துகளிடமும் அமெரிக்கா / கனடாவில் கறுப்பர்களிடமும் உங்களுக்குத்தானே இப்போது படித்து, கடினமாக வேலை செய்து முன்னேற ஒரு தடையும் இல்லையே, பிறகேன் இந்த நாட்டை நீங்கள் எப்போதும் குற்றஞ்சாட்டிக் கொண்டிருக்கின்றீர்கள் என்று கேட்பதைப் போன்ற அபத்த வகையைச் சேர்ந்தது.

ஒருவரின் வெற்றிக்கதை (அல்லது அவ்வாறாக நம்புகின்ற) எல்லோரினதும் கதையாகாது; எதையும் பொதுமைப்படுத்தல் ஆபத்தானதாகவே முடிந்துவிடும். அந்த வித்தியாசங்களைப் புரிந்துகொள்ள மறுப்பது என்பது பிறரின் குரல்களை நசுக்குவதைப் போன்றதாகும். ஒருவகையில் இதைத்தான் நமக்கு இந்த முதலீட்டிய நாடுகள் 'அமெரிக்கக் கனவு' என்று சொல்லி சொல்லி நம்மை உசுப்பேத்திக் கொண்டிருக்கின்றது. அந்தக் குரலை ரோயின் பிற்கால கனடா அனுபவங்களில் அடிக்கடி கேட்பது சலிப்பூட்டுகின்றது. அதைத் தவிர்த்திருந்தால் இந்த நூல் இன்னும் சிறப்பானதாக ஆகியிருக்கும். ஆனாலும் அதன் முதற்பகுதி போர்க்கால நினைவுகளாலும் ரோயின் தனிப்பட்ட கனடா அனுபவங்களினாலும் இது ஒரு முக்கியமான நூல் என்பதில் எந்த மாற்றுக் கருத்துமில்லை. ●

**"இளங்கோ"** <elanko25@gmail.com>

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

குழுவில் ஒரு காலியிடம் ஏற்படும். இந்த மசோதா நிறைவேற்றப்படுமானால், புதிய தேர்வுக் குழுவே புதிய தேர்தல் ஆணையரை தேர்வு செய்து குடியரசுத் தலைவருக்கு பரிந்துரைக்கும். தேர்வுக் குழுவில் எதிர்கட்சி தலைவர் இடம்பெற்றிருந்தாலும் பிரதமர், கேபினட் அமைச்சர் இருவர் ஓட்டுகளால், 2-1 என்ற கணக்கில், ஆளுங்கட்சி விரும்புபவரே தேர்தல் ஆணையராக நியமிக்கப்படுவார் என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே, இந்த மசோதாவுக்கு காங்கிரஸ் உட்பட எதிர்கட்சிகள் கண்டனம் தெரிவித்துள்ளன. இது குறித்து தனது ட்விட்டர் பக்கத்தில் பதிவிட்டுள்ள காங்கிரஸ் அமைப்பு பொதுச்செயலாளர் கே.சி. வேணுகோபால், "தேர்தல் ஆணையத்தை பிரதமரின் கைப்பாவையாக மாற்றும் அப்பட்டமான முயற்சி இது. பாரபட்சமற்ற குழு தேவை என்ற உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்பு இனி என்னாகும்? ஒரு சார்புடைய தேர்தல் ஆணையரை நியமிக்க வேண்டும் என்று பிரதமர் ஏன் நினைக்கிறார்? இது அரசியலமைப்புச் சட்டத்திற்கு விரோதமான, தன்னிச்சையான, நியாயமற்ற மசோதா. மக்களவை மற்றும் மாநிலங்களவை என இரண்டிலும் இதை நாங்கள் எதிர்ப்போம்" என்று தெரிவித்துள்ளார்.

காங்கிரஸ் எம்பி மாணிக்கம் தாகூர் வெளி யிட்டுள்ள ட்விட்டில், "மோடியும் அமித் ஷாவும் இப்போது செய்வது போல் தேர்தல் ஆணையத்தை கட்டுப்படுத்த விரும்புகிறார்கள். அனைத்து ஜனநாயக சக்திகளும் இதனை எதிர்க்க வேண்டும்" என்று கூறியுள்ளார்.

இந்த விவகாரம் குறித்து அரசியல் விமர்சகர் கார்த்திக்வேலு தெரிவித்துள்ள கருத்து முக்கியமானது. "பாரபட்சம் இல்லாத ஒருவரை தேர்தல் ஆணையராக தேர்ந்தெடுக்கும் பொருட்டுதான் அரசியல் சாசன அமர்வு நீதிபதியையும் தேர்வுக் குழுவில் சேர்த்திருந்தது. ஆனால், தற்போது மத்திய அரசு கொண்டு வரவிருக்கும் மசோதாவில் இந்த குழுவில் இருந்து உச்சநீதிமன்ற தலைமை நீதிபதியை நீக்கியிருக்கிறார்கள்.

நியாயமான முறையில் தேர்தல் நடக்க வேண்டும் என்று நினைக்கும் ஏதாவது அரசு இது போல செய்யுமா? இந்த குழுவில் இருந்து நீதிபதியை நீக்க வேண்டிய அவசியம் என்ன? பரீட்சை எழுதுபவரே மார்க் ஷீட் திருத்துபவரை நியமிப்பது போலல்லவா இது?

இந்த மசோதா எமர்ஜென்சி காலகட்டத்தில் (1975) இந்திரா காந்தி கொண்டு வந்த ஜனநாயக எதிர்ப்பு சட்ட திருத்தங்களுக்கு ஒப்பானது. இந்திரா காந்தி தேர்தலில் வென்றது செல்லாது என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தை முடக்கும் வண்ணம், பிரதமரை தேர்ந்தெடுக்கும் விவகாரத்தில் நீதிமன்றம் தலையிடக்கூடாது என்று அரசியலமைப்பையே இந்திரா திருத்தினார். அதன் பிறகு இன்னுமே எதேச்சதிகாரமான பிற திருத்தங்களையும் கொண்டு வந்தார். அது கிண்டலாக 'இந்திராவின் அரசியலமைப்பு' என்றே அழைக்கப்பட்டது .

இந்திரா கொண்டு வந்த பல மாற்றங்கள் இந்திய அரசியமைப்பின் அடிப்படை கட்டுமானத்துக்கு எதிராக உள்ளதால் அந்த திருத்தங்கள் செல்லாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இந்த அடிப்படை கட்டமைப்பு கோட்பாடு மட்டும் நம்மிடம் இல்லாமல் இருந்திருந்தால் இந்தியா எமர்ஜென்சியில் இருந்து வெளியே வந்திருக்க முடியாது என்பதே உண்மை.

ஒரு வேளை தற்போது புதிய மசோதா சட்டமானால் கண்டிப்பாக யாராவது வழக்கு போட்டு இந்த சட்டம் அரசியல் சாசன அமர்வு மதிப்பீட்டுக்கு உச்ச நீதிமன்றம் போகும். அப்போது, "அடிப்படை கட்டுமானம் என்பதே ஒரு போங்காட்டம். மெஜாரிட்டி உள்ள அரசுக்கு எந்த சட்டத்தையும் கொண்டு வர அதிகாரம் உள்ளது" என்றுதான் மத்திய அரசு தரப்பில் வாதிடுவார்கள்.

இந்திய ஜனநாயகத்தின் இறுதி பாதுகாப்பு அரசியலமைப்பின் அடிப்படை கட்டுமானம். அது உடைக்கப்பட்டால் அப்புறம் நாம் எழுந்திருக்கவே முடியாது. 'சே சே இப்படியெல்லாம் நடக்காது' என்று நினைத்திருந்த பல விஷயங்கள் ஒவ்வொன்றாக சர்வ சாதாரணமாக நடக்கும் போது, இந்த அச்சம் வருவதை தவிர்க்க முடியவில்லை.

இந்த மசோதாவை உச்சநீதி மன்றத்திற்கு நேரடியாகசவால் விடும் அரசின் நடவடிக்கையாகவே பார்க்க வேண்டும்" என்று கூறியுள்ளார், கார்த்திக் வேலு.

ஆனால், இந்த மசோதாவுக்கு முன்பே உச்ச நீதிமன்றத்துடன் மோதல் போக்கை மத்திய அரசு தொடங்கிவிட்டது குறிப்பிடத்தக்கது. டெல்லியில் ஐஏஎஸ் அதிகாரிகள் நியமனம் உட்பட மாநில அரசின் நிர்வாகத்தை மத்திய அரசு கட்டுப்படுத்துவது குறித்து உச்ச நீதிமன்றம் சில மாதங்களுக்கு முன் உத்தரவு பிறப்பித்தது. ஆனால், உச்ச நீதிமன்ற உத்தரவு வெளியான உடனேயே, இந்த உத்தரவை ரத்து செய்யும் வகையில் அவசர சட்டம் ஒன்றை மத்திய அரசு கொண்டு வந்தது. அதன் மசோதா, ஆளுங்கட்சியின் பெரும்பான்மை காரணமாக லோக்சபாவிலும் ராஜ்ய சபாவிலும் சிக்கலின்றி நிறைவேற்றப்பட்டது குறிப்பிடத்தக்கது.

இதுதான் புதிய மசோதாவுக்கும் நேரும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அது நாட்டுக்கு நல்லதா? ●

# அய்யனார் ஈடாடி கவிதைகள்



1

கிழக்குச் சூரியனின்
கதிர் சாயும்
கருவேலங்காட்டில்
செந்நீர் கசிந்து வடிய
கிழிக்கும் முட்கள்
கிழித்த போதும்
உருமாவை அவிழ்த்து
அப்பா அசந்து
அமருகையில்
அம்மையின் கைகள்
நிறுத்துவதில்லை
சுள்ளி முட்களை
வெட்டிச் சாய்ப்பதில்
ஆம்
கோடையின்
கொடிய வறுமையில்
புகை முண்டும்
அடுப்பங்கரையில்
காய்கிறது
சுள்ளி விறகுகளைப்
போன்று
பசியின் ஈரம்
அம்மை விறகுக்கு
போகாத நாட்களில்...

2

மணல் அரித்துவிட்ட
ஆற்றங்கரையோரத்தில்
காட்டுக் கருவைகளினூடே
மிச்சமிருக்கும் எச்சத்தில்
கொன்றை மரத்தின்
மஞ்சள் மலர்கள்
மெல்ல பெய்து
தூவி வருடுகின்றன
கிராமத்து சுடுகாட்டில்
படுகொலையால்
உயிர்நீத்த உடல்மீது
ஆங்காங்கே
முளைத்திருக்கும்
புதை முகடுகளில்...

3

பெருவானத்தாயின்
மடி சுரக்கும்
பூஞ்சாரலில்
புங்கை மரத்தடியில்
தலச்சிக்கு எடுக்கும்
பூங்குஞ்சுகள்
தொலைந்து போன
தாய்க்கோழி
உதிர் இறக்கை
தூரத்தில் சருகடித்து
பறந்து வருவதை கண்டதும்
தலையைச் சிலுப்பி
நிமிர்கையில்
பூக்கிறது வானம்
சுருள் வில்லாய்...

அய்யனார் ஈடாடி
<ayyanarsri625@gmail.com>

## நிசப்த நடனம்

# இருதலைக் கொள்ளி எறும்புகள்

**நாகரத்தினம் கிருஷ்ணா**

அனைத்து விலங்குகளினும் பார்க்க மனித விலங்குகள் மேம்பட்டவை. காரணம், இவற்றுக்கு புலன்களால் உணரப்பட்டதை பகுத்தாயும் திறனுண்டு. ஆனால், மனிதர் கூட்டத்தின் பிரச்சினையே இங்குதான் ஆரம்பம். நரி, ஓநாய், சிங்கம் புலி, கரடியின் உருவங்கள், நேரடியாக அவ்விலங்குகளின் வலியத் தாக்கும் தன்மையை மான், முயல், ஆடு மாடுகளுக்கு உணர்த்திவிடும். அதன் விளைவாக கொடிய விலங்குகளைக் கண்ட மாத்திரத்தில் ஓடி மறைந்தும், இயலாதபோது அவற்றின் வயிற்றுப் பசிக்கு இரையாகியும் சாதுவான விலங்குகள் தங்கள் கானகச் சமூககத்தின் நியதிக்கு உட்படுகின்றன.

மனிதர் கூட்டம் கற்காலத்தில், ஏனையை விலங்குகளைப் போலவே வயிற்றுப் பசிக்கு வேட்டையாடி வாழ்ந்தது. இவ்வேட்டையில் சகமனிதனையும் தின்று பசியாறியது. மனிதன் இருண்ட கானக வாழ்க்கையில் அலுத்து, தன் துணை தன் மக்கள், தம்முடைய சுற்றமென கூடி வாழ முற்பட்டு, வேட்டையை நம்பியல்ல விவசாயம் செய்தும் பசியாற முடியும் என்றுணர்ந்த மாத்திரத்தில் திறந்த வெளிகளைத் தேடினான். தொடர்ந்து குடும்பங்களும் சுற்றமும் 'நான்', 'நாம்' என்ற அடையாளத்தை முன்னிலைப்படுத்தியதன் காரணமாக ஊர், நகரம், தேசமென சேர்ந்து வாழ ஆரம்பித்து, கற்காலத்திலிருந்து மனிதன் வெகுதூரம் விலகி வந்திருந்தான். எனினும், அவனுடைய அடிப்படைப் பண்பிலிலிருந்து விலகினானா என்பது கேள்வி.



ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சகவிலங்கை, சக மனிதனை வேட்டையாடி விளையாடினானே, பிற உயிர்கள் வலியில் துடிக்க கொன்றானே, அவற்றின் உடலைக் கிழித்துப் பசியாறினானே, அக்கொடிய குணம் மனிதனிடம் இன்றில்லையா?

வேட்டை மனம், அதற்கு அடிமைபட்ட உணர்வுகள் இன்றைக்கும் இருக்கவே செய்கின்றன. இன்றிவன் கற்கால மனிதனில்லை, நிர்வாணமாக திரிந்தவனில்லை, பகுத்தறியத் தெரிந்தவன். காலத்திற்கேற்ப, சூழலுக்கு ஒப்ப, உயிர் வாழ்க்கைக்கு மாற்று வழிமுறைகளை உபாயங்களை, தந்திரங்களைக் கண்டறியக் கூடிய புத்திசாலி. பச்சையாக, கைவினைக்கு உட்படாமல், சமைக்காமல் மென்று விழுங்கிய, தின்று பசியாறிய கற்கால அநாகரீக மனிதனில்லை. இவன் நன்றாக உடுத்தத் தெரிந்தவன், தலைவாரத் தெரிந்தவன், மேடையில் நாகரீகமாகப் பேசத் தெரிந்தவன். இவனுக்கு அரசியல்வாதி, அதிகாரி, பேராசிரியன், எழுத்தாளன் என்கிற சமூக அடையாளங்கள் இருக்கின்றன. இவன் வேட்டையாட வேண்டிய அவசியமில்லை. இவனுக்குப் பதிலாக வேட்டையாடவும் தோலுரிக்கவும் செத்த உடலை உப்பு காரமிட்டு விரும்பினால் தீயிலிடவும், விரும்பாதபோது கூலிகளைக் கொண்டும் தமது விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளவும் முடியும். இன்றைய பங்காளிச் சண்டை, சாதிச் சண்டை, இனச் சண்டை, எல்லைச் சண்டை, உலகப்போர் என அனைத்துமே வேட்டை மனத்திலிருந்து மனிதன் விலகவில்லை என்பதன் சாட்சியங்களே, பலியாகும் உயிர்களின் வதைகளை, அழுகுரலை இன்றும் வேட்டையாடும் மனித விலங்குகளன்றி வேடிக்கைப் பார்க்கும் மனித விலங்குகளும் பொருட்படுத்துவதில்லை. அதற்கு அவரவர்க்கு ஆயிரத்தெட்டு காரணங்கள் இருக்கின்றன.

உள்ளூர் சண்டையில் ஆரம்பித்து உலகப் போர் வரை நீயும் நானும் ஒன்றல்ல என்கிற பகை உணர்வின் வெடிப்பு. உலகின் ஏதோ ஒரு பகுதியில் ஓர் இனம்



மற்றோர் இனத்தை அழிப்பது இருபத்து மூன்றாம் நூற்றாண்டிலும் தொடரவே செய்கிறது. 'ஓர் இனத்தை பகுதியாகவோ அல்லது முழுமையாகவோ, மனித இனம் சார்ந்த, இன ஒதுக்கல், சமய வேற்றுமை அல்லது தேசிய இன வேற்றுமை போன்ற காரணங்களால் கொல்ல நினைப்பது அல்லது அழிப்பது' இனப்படுகொலை. இந்த சொல் அண்மையில் (1943) ஞான ஸ்னானம் பெற்றது என்கிறபோதும், மனித குலம் தோன்றியதிலிருந்தே ஊர்ச் சண்டையில் ஆரம்பித்து உலகச் சண்டை வரை இனப்பகையை மையமாகக் கொண்டவை. அமெரிக்கா, ஆஃப்ரிக்கா, ஐரோப்பா என எந்தக் கண்டமும் மானுடத்தை அவ்வப்போது தாக்குகிற இனப்படுகொலை என்கிற இப்பேரிடருக்கு தப்பியதில்லை.

'நிசப்த நடனம். பிரதீபன் ரவீந்திரன் என்பவர் எழுதி இயக்கியுள்ள தமிழ்த் திரைப்படம், ஓர் ஆவணப்படம், கலைப்படம். 1983இல் தொடங்கி 2009 வரை நீடித்த, சிங்களப் பெரும்பான்மை தமிழின சிறுபானமையை சீரழித்த, கொன்று குவித்த, திக்கு திசையின்றி பின்னவர்களை தேசாந்திரிகளாக அலையவிட்ட, ஓர் அவலச் சரித்திரத்திரத்தை திரைப்படக் கலை என்கிற தூரிகைக்கொண்டு காலத்தால் அழியாதச் சித்திரமாக இந்த ஈழத்துக் கலைஞர் உருவாக்கியிருக்கிறார். இப்படைப்பில் எழுத்து, இயக்கம், நடிப்பு இது தவிர திரைப்பட ஆக்கத்தின் பிறபணிகளுக்கும் தம்மை முழுமையாக அர்ப்பணித்து கொண்டிருக்கிறார்.

புலம்பெயர்ந்த வாழ்க்கைக்கு சபிக்கபட்டவர்கள் இருவகை. அகதியாக வந்த நாட்டிலும் பிறந்த மண்ணையும் உறவையும் அவர்களுடன் தொலைபேசியிலும், கடிதங்களிலும் நினைத்தது போக, ' தேடிச் சோறுநிதந் தின்று - பல சின்னஞ் சிறுகதைகள் பேசி - மனம் வாடித் துன்பமிக உழன்று - பிறர் வாடப் பலசெயல்கள் செய்து - நரை கூடிக் கிழப்பருவ மெய்தி - கொடுங் கூற்றுக் கிரையாகி போனபின்', புலம்பெயர்ந்த நாட்டிலும் தோற்றம் - மறைவு என விளம்பர சுவரொட்டிகளுடன் வேடிக்கை மனிதராக முடிகிறவர்கள், முதல்வகை. இரண்டாம் வகையினர் நிசப்த நடனம் கதை நாயகன் சிவா போன்றவர்கள். அவர்கள் இருதலைக்கொள்ளி எறும்புகள், உயிரை சொந்த மண்ணிலும், உடலை வந்த மண்ணிலுமாக நிறுத்தி அவதிப்படுகிறவர்கள்: உறக்கம், விழிப்பு, பணி நேரம், ஓய்வு, நடக்கும் போது, மெட்ரோ - பேருந்து என பயணிக்கும்போது, கிட்டத்தட்ட அல்லும் பகலும் ஊர், உறவு, தோட்டம் துறவு, சொந்தம் பந்தம் என்கிற நீங்காத நினவுகளின் இணைகோடுகளாக நீளும் யுத்தம், படுகளம், அதன் கொடூரம், அனாதைகளாக்கபட்ட மனிதர் வாழ்க்கை என்கிற ஆழ்கடல் நினைவுகளில் தத்தளிக்கிறவர்கள்.

இலங்கை உள்நாட்டுப் போரில், 2009 மறக்கமுடியாத வருடம். ஆயுதம் ஏந்திய தமிழர்களை மட்டுமல்ல பல ஆயிரம் அப்பாவி தமிழர்களையும் பலிவாங்கிய யுத்தத்தின் இறுதி அத்தியாயம் எழுதப்பட்ட ஆண்டு. தனிமனித தாக்குதல்களுக்கு சட்டமுண்டு, விசாரணையுண்டு, சாட்சியங்கள் உண்மையெனில் தண்டனையுண்டு. இங்கே தாக்குதலை நடத்தியது, கொலைகாரர்களாக மாறியது, அரசியல் சாசனப்படி அதிகாரம் பெற்ற அரசாங்கம். தமிழர்கள் அனைவரையுமே அவர்கள் விடுதலைப்புலிகளாக பார்த்தார்கள். தமிழினத்தை அழிப்பதற்கு, அவர்கள் கோரிக்கைகளை நீர்த்துப் போகச்செய்ய, ஒட்டுமொத்த தமிழினத்தைக்

குற்றவாளிக் கூண்டில் நிறுத்தித் தண்டிக்க இப்பார்வை அவர்களுக்கு சௌகரியத்தை அளித்தது.

நிசப்த நடனத்தின் கதைக்களத்தின் காலம் இதற்கு முந்தைய பத்தியில் கூறியதுபோல 2009. புலம்பெயர்ந்த ஐரோப்பிய மண்ணில் தமிழ் ஈழப் பதாகைகளை ஏந்தி, தங்கள் படும்பாட்டை உலக மக்கள் புரிந்துகொள்ளவேண்டி தமிழர்கள் பங்கேற்கும் ஊர்வலங்களுடன் படம் தொடங்குகிறது. சிவா என்ற இளைஞனின் புலம்பெயர்ந்த வாழ்க்கை பற்றிய கதையென்பதால் பிரான்சு - இலங்கையென காட்சிகள் மாறி மாறி வருகின்றன.

சிவா, ஈழத் தமிழ் இளைஞன். ஐரோப்பாவிற்கு, உள்நாட்டுப் பிரச்சினையிலிருந்து தப்பிக்க, வருகிறான். தனக்காக மட்டுமல்ல போரினால் வதைபடும் தன் பெற்றோரைக் காப்பாற்றும் பொறுப்பும் அவனைத் துரத்த அங்கே இங்கே என்று அலைந்து பிரான்சு நாட்டில் அடைக்கலம். பிரான்சு விருப்பத் தேர்வு அல்ல, அவனுடைய விதியின் தேர்வு.

தொடக்க காட்சியில் சிவா ஒரு மொழிபெயர்ப்பாளர் உதவியுடன், ஒரு பிரெஞ்சு அதிகாரியுடன் தனது அகதி விண்ணப்ப நிலைப்பாடு குறித்து பேசுவதாக காட்சி. அதிகாரி, இலங்கை அரசாங்கத்தால் சிவாவுக்குப் பிரச்சினைகள் இருக்கின்றன, என்பதை உரிய சான்றுகளுடன் நிரூபித்தாலொழிய அகதி அந்தஸ்து கிடைக்காதென தெரிவிக்கிறார். உடன் வந்த மொழிபெயர்ப்பாளர், “நீ கவலைப்படாதே எனக்குத் தெரிந்த சடடத் தரணியிருக்கிறார் ; அவரை வைத்து பிரச்சினையை முடித்து விடலாம். இதற்கான சில கதைகள் என்னிடம் இருக்கின்றன,” எனத் தெரிவித்து அவரே சில குறிப்புகளை தருகிறார். சிவா நடந்த உண்மைகளைத்தானே தெரிவிக்க முடியும் எனக்கேட்க, “இங்கே அகதிக்கு விண்ணப்பிக்கிறவர்கள் அனைவரும் செய்வதுதான், அதுபற்றிய கவலைகள் உனக்கெதற்கு. எனக்கு நீ 850 யூரோ கொடு, அனைத்தையும் நான் பார்த்துகொள்கிறேன்” என்கிறார்.

தொடரும் காட்சியில் இலங்கை, சிற்பான்மை யின்ரான தமிழர் பகுதி, சிறு வீடு வெள்ளந்தியாகச் மூன்று சிறுவர்கள். யுத்தநிழலில் வாழ்கிறோம் என்பதைக்கூட அறியாத விளையாட்டுப் பருவம். மீன் தொட்டி, அதிலுள்ள மீன்கள் குறித்தும் அம்மீன்கள் வாயால் குஞ்சுபொறிக்குமென வியப்புடன் வார்த்தைகளை உச்சரிக்கும் நேர்த்தியில் நமது பார்வை அவர்களுடைய அப்பாவித்தனமான முகங்களில் தேங்கி நிற்க, மறுகணம் நம் நெஞ்சத்தை உலுக்குகின்ற வகையில் குண்டடிப்பட்டு சிறுவன் சாகிறான்.

தொடர்ந்து பாரீஸில் கணினியில் சிவா யுத்தகளங்களை தேடிக்கொண்டிருக்க, திரையில் கிளிநொச்சி, முல்லைத் தீவு இராணுவத் தக்குதல்களுக்குப் பலியாகும் மக்கள், இடிபாடுகள், அழுகுரல்கள். சொந்தநாட்டிலேயே அகதிகளாக வாழவேண்டிய நெருக்கடி. இது தவிர சிவாவை தனிமனிதனாக மன உளைச்சலில் தவிக்கும் நோயாளி போல காட்டும் இடங்களிலெல்லாம் ஜெயிப்பது கேமராவா சிவாவா என முடிவெடுப்பது கடினம். அகதியாக வாழ்கிற மண்ணில் தன் வாழ்க்கைக் கண்டு நிறைவுறாமல், தாயுடன் கைத்தொலைபேசியில் சிவா உரையாடுவதுபோன்ற காட்சிகள் இயல்பாக படமாக்கப்பட்டிருக்கின்றன. “கதியா காசு அனுப்புகிறேன்” என பல காத தூரத்தில் இருக்கிற தாய்க்கு மகன் தரும் உத்தரவாதமும், ஊரில் நாட்டைவிட்டு வெளியேறவிருக்கும் நண்பனுடன் வாதிடும் புலிப்படையைச் சேர்ந்த நண்பன் ‘துவக்கு’ (துப்பாக்கி) விஷயத்தில் கொண்டிருக்கும் நம்பிக்கையை விவரிக்கும் வசனங்களும், நடத்தும் வாதமும் ; பாரீசில் சிவா வேலை செய்யும் உணவு விடுதியில் விடுதலைப் புலிகளுக்கு ஆதரவு நிலைப்பாடுகொண்ட நண்பரும், அவர்களால் என்ன பலன் கண்டோம் என வாதிடும் நண்பரும் ஒரு கட்டத்தில் உரத்து விவாதிக்க, அதற்கு எதிரி வினையாக சிவா சன்னற் கதவை பைத்தியக்காரன் போல கைகளால் திரும்பத் திரும்பத் தாக்குவது, அனைத்துமே படம் முடிந்தபின்னரும் நம்மை தொடர்ந்து வருகின்றன.

திரைபடமே சிவாவுடையது, சிவாவின் கடந்தகாலம் நிகழ்காலம்; சொந்த மண் அந்நிய மண்; இந்த இரண்டும் கெட்டான் வாழ்க்கை தந்த அதிர்ச்சியிலிருந்து மீள முடியாமல், குறிப்பாக அப்பாத்திரம் தனிமைக்கு ஆட்படும் போதெல்லாம் ஒரு வித பதற்றத்திற்கு பலியாவது ஒரு தேர்ந்த கலைஞனாக பிரதீபன் இரவீந்திரனை நமக்கு அடையாளப்படுத்துகிறது. திரைப்படத்தின் இறுதிக்காட்சியில் காய்ந்து தீயில் கறுகி வீழ்ந்து கிடக்கும் பனைகள், பசுமாட்டின் அழுகுரல், கூடாரக் குடிமக்களாக விதிக்கபட்ட மனிதர் வாழ்க்கை, தாயின் கேவல், பசியில் ஓலமிடும் பச்சிளம் குழந்தை, குழந்தையை தோளில் சுமந்துகொண்டு நீரில் இறங்கும் சிவா போன்ற காட்சிகளைச் சகித்துக்கொள்ள கனத்த இதயம் வேண்டும். போதாதற்கு காற்றும் உரத்து ஒலித்திட ஓர் அசாதாரண நிசப்தம். படம் பார்க்கிற எந்த மனமும் சிவா படும்பாட்டிற்கு, அல்லது சிவாவின் இருப்பிற்கு தன்னைத் தாரைவார்க்கும் எனபது உண்மை.

பிரதீபன் இரவீந்திரன் ஒரு மகா கலைஞன். உலக அளவில் விரைவில் அங்கீகரிக்கப்படுவார் என்பதென் பரிபூரண நம்பிக்கை. ●

நாகரத்தினம் கிருஷ்ணா
<nakrish2003@yahoo.fr>

# பனிவிழும் பனைவனம்

## மா. சின்னத்தம்பி

பனிவிழும் பனைவனம் - செல்வம் அருளானந்தம்; விலை ரூ. 290;
வெளியீடு; காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி.சாலை, நாகர்கோயில் - 629001;
தொலைபேசி: +914652278525; மின்னஞ்சல்: kalachuvadu@sabcharnet.in

கூர்மையான சமுதாயப் பார்வையும் நிறைந்த இலக்கிய தாகமும் கொண்ட செல்வம் அருளானந்தத்தின் மூன்றாவது அனுபவப் புனைவு இது.

பனைமரக் காடுகளும், பரந்த மணற்பரப்பும், கடற்காற்றும் இயற்கையுடன் இணைந்த சூழலும், கடும் உழைப்பும் சிக்கனமும், கல்வியில் மேலாண்மையும் கொண்ட இலங்கை வடபகுதி தமிழர்களின் சமூக வாழ்க்கைப் பற்றிய குறுக்கு முகத்தை இந்நூல் காட்ட முயல்கிறது. அவர்களின் அரசியல் நெறிமுறைத் தடம் மாறத் தொடங்கிய - அரசியல் தலைமைத் தொடர்பான புதிய செல் நெறிகளின் மூலக்கூறுகளின் ஆரம்பம் பற்றி பேச முனைகின்றது.




தனிமனித இருப்பு, புதிய சமூக அமைதி, பாதுகாப்பு, மகிழ்ச்சி என்பன புதிய அரசியல் தளமாற்ற செயல்முறைகளால் எவ்வாறு சிதைகின்றன, சின்னாபின்னப்படுகின்றன? தனிமனித, குடும்ப, சமூக உறவுகள் எவ்வாறு உடைகின்றன? இவை இளைஞர்களின் புலம்பெயர்தலை எவ்வாறு தூண்டுகின்றன? என்பது பற்றியதாக அமைகின்றது இந்தநூல்.

நாகரிக இளைஞர்கள், யுவதிகளின் மையமாக கருதப்பட்ட யாழ்ப்பாண கச்சேரி பகுதியில் வளர்கின்ற கட்டிளமைப் பருவ இளைஞர்களின் இயல்பான துடுக்குத்தனத்துடன் தொடங்குகின்றது கதை. மாறுகின்ற பல்வேறு நிலைமைகள், அவற்றைத் தூண்டுகின்ற விசைகளினால் உந்தித்தள்ளப்பட்டு உள்நாட்டிலும் வெளிநாடுகளின் பல நகரங்களிலும் துன்பப்படுகின்ற இளைஞர்களின் அவலமாகவும் விரக்தியாகவும் கோபமாகவும் கதை விரிகின்றது. முடிவுறாத அவநம்பிக்கை, கோபம், கிறிஸ்தவ வேதாகமம் தந்த நம்பிக்கையுணர்வு நிறைந்த கதாநாயகனின் மனவெழுச்சிகளுடன் நிறைவு பெறுகின்றது.

இயலாமையும் எதிர்மறை நம்பிக்கையும் வெளிப்படுகின்றது. துன்பியல் உணர்வின் உறைநிலை அது. இவற்றுக்கிடையில்தான் எத்தனை நிகழ்வுகள், உணர்வுகள், முரண்பாடுகள், பாசாங்குகள், துரோகங்கள்... இவற்றூடாக பயணிக்கிறான், வாழ்கிறான் கதாநாயகன்.

கதை நிகழ்கின்ற சூழலும் மக்களும் சம்பவங்களும் எனக்கு நன்கு பரிட்சயமானவை. ஐம்பது ஆண்டுகளுக்கு முந்தைய உணர்வுகளும் நினைவுகளும் ஏக்கம் தருகின்றன. சில பகுதிகளை நிறுத்தி வாசித்தேன்; சில பகுதிகளை மீளவும் பல தடவைகள் வாசித்தேன். மனதை நெருங்கிவிட்டன.

அக்கால இளைஞர்களின் நட்பு முறைகளும் அதில் இழையோடியிருந்த பாச உணர்வுகளும் நெகிழ்ச்சி தருகின்றன. உரையாடல் மொழியும் குறியீட்டு சொற்களும் ரசிக்கத்தக்கவை. வீட்டுக்கும் சமூகத்துக்கும் தெரியாமல் அவர்களாக உருவாக்கிய நட்பு உலகிலான வாழ்க்கை தனித்தன்மையானது. நூலாசிரியர் செல்வம் அழகாக தருகின்ற அழியாத கோலங்கள் இவை.

செல்வம் அருளானந்தம் நான்கு தசாப்த காலத்தில் நிறைய நாடுகளையும் நகரங்களையும் பல்வகை பண்பாடுகளையும் பார்த்தவர், உணர்ந்தவர். நிறைந்த படிப்பாளி; இதன் வழியாக பட்டறிவு (Tacit knowledge) நிலையில் உன்னதமான உயரத்தில் உள்ளவர். இதனை இந்நூலின் எல்லாப் பக்கங்களிலும் உரத்துச் சொல்கின்றன.

ஆழமான சமுதாய நேசிப்பும் உட்புதைந்த மனிதாபிமானமும் கொண்டிருப்பதால் எல்லா நிகழ்வுகளையும் உள்ளூடுருவி பார்க்கிறார். இதன்வழியாக அசிங்கமான சமூக வலையமைப்பு

மீது ஒரு பேரலையின் வலுக்கொண்ட தார்மீக கோபம் ஏற்படுகின்றது. அவர் காட்டுகின்ற எளிய மக்களது வார்த்தைகளின் வழியாக அது வெடித்து விழுகின்றது. அவரது மொழி வீரியம் பெறுவது அதனால்தான். சில இடங்களில் எழுத்துலக நாகரீகம் பார்க்காமல் தெறித்து விடுகின்ற மொழியின் பிரயோகமும் இத்தகையதுதான்.

எளிய குடிமகன் ஒருவன், தனது வாழிட ஒழுங்கையில் தன்னைக் குலைத்து வரும் நாய்க்கு பேசுகின்ற தூஷண வார்த்தைகள், உண்மையில் நாய்க்கல்ல; நாய் வளர்க்கப்படுகின்ற சமுதாயத்தின் சாதிப் பாகுபாட்டின் மீதான கோபத்தின் வெளிபாடுதான் அது.

இந்த அனுபவம் புனைவின் இயங்குதளங்களில் முக்கியமான ஒன்று, இலங்கை வடபகுதி தமிழர்களின் சாதிப் பாகுபாட்டுணர்வும் அது சார்ந்த சமூக உறவுகளின் அநீதியும்தான். தொழில், கல்வி, வாழிடம், காதல், திருமணம், சமூக ஊடாட்டம் போன்ற எல்லாவற்றிலும் இந்த சமுதாய படிமுறையின் அநீதி கோலோச்சுகின்றது. தனிமனிதன், குடும்பம், நிறுவனம், சமுதாயம் என்ற எல்லா நிலைகளிலும் அது இயங்குகின்றது இம்சைப்படுத்துகின்றது. சமுதாய வலையமைப்பின் எல்லா முடிச்சுகளையும் இது அசிங்கப்படுத்துகின்றது.

'ஓமடா, ஓமடா உங்களுக்கும் ஒரு தமிழ் ஈழம்.. இன்னும் சொந்த இனத்திலை ஒரு பகுதியை கோவிலுக்குள்ள விடுறியள் இல்லை; தேத்தண்ணி கடை வழியே சரிசமமாய் இருக்க ஏலாது; உங்களுக்கு நாடு தேவையோ? போடா போ.' (பக்கம் 212)

'யாழ்பாணத்திலை சாதி ஒரு பெரிய பிரச்சினைதான். ஆனா ஒரே சாதி எண்டு சொல்லுறியள் அதிலையும் சிக்கலோ... என்னால் ஒரே சாதிக்குள்ள இருக்கிற மேலோங்கிகள் என்கிற வர்க்க வேறுபாட்டை அவருக்கு விளங்கப்படுத்த முடியவில்லை.' (பக்கம் 79)

'அந்த ஆயுர்வேத டொக்டர், "அப்ப நீ டொக்டராகி இங்க வந்து ஆஸ்பத்திரி போட, எங்கட ஆட்களெல்லாம் நீ எம்.பி.பி.எஸ் டொக்டர் எண்டு உங்கட படியேறி வைத்தியம் பார்க்கப்போகினம். அதை ஒருக்கால் பார்ப்பம்' என்று குரலை உயர்த்தினார்.' (பக்கம், 108).

இதில் 'உங்கட படியேறி', 'அதை ஒருக்கால் பார்ப்பம்' என்று குரலை உயர்த்தி என்ற வசனத் தொடர்கள் எல்லாம் எதைச் சொல்கின்றன? இவை சார்ந்த கோபாவேசம், மௌனம் காக்கும் எரிமலையின் குழம்பு மோல செல்வத்தின் உள்ளே கொதித்துக் கொண்டிருப்பதை பல இடங்களில் கண்ணகியின் சீற்றத்துடன் பதிவு செய்கிறார் செல்வம்.

போதுமான பலமான கல்வியோ பொறுப்பு மிக்க குடும்ப வழிகாட்டல்களோ பயன்மிகு சமுதாய உதவிகளோ இல்லாமல் உணர்வின் வழியில் அலைக்கழிக்கப்படும் விடலைப் பருவத்து இளைஞர்களின் வாழ்க்கை, துன்பம், குரோதம் என்பவற்றால் எவ்வாறு பாதிக்கப்பட்டது; பாதிக்கப்படுகிறது என்பதை உணர்ச்சிகரமாக பதிவு செய்கிறது இப்புனைவு.

பிறந்த நாட்டில் சமூகமும் அரசும் அரசியல் தலைவர்களும் இளைஞர்களை எப்படி வஞ்சிக்கின்றனர்? புகலிடம் தேடி ஓடிய நவீன நகரங்களில், துணைகளின்றி, மொழி தெரியாது, நியாயம் ஏதுமின்றி - அவர்கள் எவ்வாறு துன்புறுத்தப்படுகின்றனர்? இவற்றை எல்லாம் துயர் சுமந்த சொற்கள், உரையாடல்கள் மூலம் செல்வம் வெளிப்படுத்துகிறார்.

நாதியற்ற நாய்கள் போல அவர்கள் துரத்தப்படுகின்றனர். துன்பத்தின் மேல் துன்பம்; வலிகளைச் சுமக்க முடியாமல், ஆழ்மனவலிகளைப் பகிரமுடியாமல் அவர்கள் படுகின்ற வேதனைகள் செல்வத்தின் வார்த்தைகளாக பல இடங்களில் கசிகின்றன.

'இப்படி மாட்டுப்படுவேன் என்று யார் கண்டது? பெயர் மறந்து போன ஒரு பட்டணத்தில், மறியலில் இருந்ததையும் (காரணமின்றி) அடிவாங்கியதையும் நினைத்தால் மனம் விசும்பும்.'(பக்கம் 206)

லண்டன் போய் சேர்ந்து விடுவான், தாய்களுக்கு உதவி செய்வான் என்று நம்பி எல்லா நண்பர்களும் கையில் இருந்த பணத்தைப் போட்டு துருக்கிக்காரனுடன் அனுப்பி வைத்த நண்பன், 'நாலு மாதம் கழித்தபின் நாங்கள் இருந்த ரூம் வாசலில் பிச்சைக்காரன் கோலத்தில், கடும் பசியோடு நின்றிருந்தான். அவனைப் பார்த்து நாம் திடுக்கிட்டுப் போறோம்.' (பக்கம் 207)

தன்பிள்ளை பாதுகாப்பாக, வசதியாக, மேலை நாட்டு நகரத்தில் இருக்கிறான் என பெற்றோர் நம்பும் நிலையில் அவர்களது பிள்ளைகள் மொழியறியாத, உறவுகள் ஏதுமில்லாத நகரங்களில் அடி, உதை, பசி, பட்டினி, தனிமை, அவநம்பிக்கை, ஏக்கம், விரக்தி நிரம்பிய வாழ்க்கை வாழ்கிறார்கள்; வாழ்ந்தார்கள். இதனை செல்வம் எழுத்தில் காட்டும் விதம் மனதைப் பிழிந்து எடுக்கிறது.

கதை நாயகர் சந்திக்கின்ற - காட்டுகின்ற மனிதர்கள் பலவகையினர்; சிலர் யாழ்பாண சமூகம் மறக்க முடியாதவர்கள்; மறக்கக் கூடாதவர்கள்.

யாழ்பாணத்திலிருந்து முதன்முதலில் நோர்வேக்கு மோட்டார் சைக்கிளில் போக திட்டமிட்ட, இந்த மக்களுக்கு நிறைய உதவிகள் செய்த குட்டியண்ணா என்று அழைக்கப்படும் அன்ரனி ராசேந்திரம் பற்றிய செல்வத்தின் நினைவுகள் உணர்வுகள்




உன்னதமானவை.

எமது மண்ணின் அக்கால அரசியலில் களமாடிய பல மாந்தர்கள் பற்றியும் கவனமாக பதிவு செய்கிறார், செல்வம். சிலர் ஒளியாகவும் சிலர் இருளாகவும் தெரிகிறார்கள்.

சிவ சிதம்பரம், அமிர்தலிங்கம், அல்பிரட் துரையப்பா, தங்கத்துரை, குட்டிமணி பிரபாகரன், சிவகுமாரன், செல்வம், இன்பம், விஜயவீரா, ஜே.ஆர், தாடித்தங்கராசா என பட்டியல் நீள்கிறது. எங்கள் அரசியல் வரலாறு தனியாக எழுதப்படும் போது கனதியான உள்ளீடுகளாக இவை பயன்படும் என செல்வம் நம்புகிறார்.

'போரும் காதலும் என்னை மாற்றி விடுமோ என்று பயந்தேன்.' (பக்கம் 59) என்கிறார் ஆசிரியர்.

இளைஞர்கள் போர்க்குணத்துடனும் பெண்கள் காதல் உணர்வுகளுடனும் உலாவுகின்றனர். இவை பற்றிய நிகழ்வுகள் பலவற்றின் மின்னலாக நகர்கின்றது இப்புனைவு.

பருவ வயதுக்காதலி குருநகர் பத்மினியும், பருவம் தப்புமுன் திருமணம் செய்ய முனையும் மன்னார் மறிய கொற்றியும், கவனக்குறைவால் கார்ப்பமாகும் யோகம் அக்காவும், திருமண வாழ்வின் துயர்களில் திளைக்கும் ரதி மாமியும், நியமங்களுக்கு உட்படாத சில்லறைவணிககாதலியாகவரும்சலீம்முதலாளியின் தோழியும் இவரது கதையின் மாதர்கள்.

நாயகனின் பருவகால காதல் பூவை கிள்ளி

எறிவதற்கு சாதி நகத்தை பயன்படுத்தும் பத்மினியின் அக்கா இயல்பான யாழ்ப்பாண சமூகத்து பெண்ணுக்கு ஒரு மாதிரி.

திருமணம், குழந்தைகள் என்பன ஆண்களை பாதிப்பதை விட பெண்களைத்தான் பல முனைகளில் நியாயமின்றி பாதிக்கின்றது. செல்வத்தின் பெண் பாத்திரங்கள் சொல்லும் துயரச் செய்திகள் பல இப்புனைவில் பரவிக் கிடக்கின்றன.

இதே காலப்பகுதிகளில் அமெரிக்காவிலும், திருமணமும் அவர்களது குழந்தைகளும் பெண்களின் தொழிலுக்கும் குடும்ப வாழ்வுக்கும் சுதந்திரத்துக்கும் பல்வேறு நெருக்கீடுகளை ஏற்படுத்தியதாக அமெரிக்க பெண்ணிய ஆய்வாளர் காற்பலீன் (katbleen shortridge: 1975) குறிப்பிட்டிருப்பது ஒப்பிடத்தக்கது.

உலகம் முழுவதுமே காதலும் திருமணமும் கர்ப்பம் தரித்தலும் ஆண்களை பாதுகாக்கின்றன; பெண்களை தண்டிக்கின்றன. துன்புறுத்துகின்றன. சுதந்திரத்தைச் சுரண்டுகின்றன. செல்வம் இதை மிக யதார்த்தமாக பதிவு செய்கிறார். வாசகர் சிந்தனையையும் உள்ளத்தையும் கிள்ளி விடுகிறார்.

1980களுக்கு முந்திய அப்புக்காத்து அரசியலும் அது அடைகாக்கும் மோலித்தனங்களும் கள்ளத்தனங்களும் பருவகால வீராவேச மேடைப் பேச்சுக்களும் எரிச்சலூட்டுவதாக பல நிகழ்வுகள் மூலம் காட்டுகிறார் ஆசிரியர். சந்தர்ப்பவாத அரசியல், அதில் ஊறிக்கிடக்கும் துரோகங்கள், வாக்கு வேட்டைக்கான அன்புரிமைகள் பற்றி நிறையவே பேசுகிறார் செல்வம்.

'யாழ்பாணத்தான் படிச்சானோ உழைச்சானோ காசை மிச்சம் பிடிச்சானோ என்று தானே வாழ்ந்தான். சுதந்திரம் கிடைச்சவுடனேயே 5 இலட்சம் தமிழர்களை அதுவும் இந்த நாட்டை வளமாக்கிய அந்த மனுசரைத் தமிழர்கள் என்ற ஒரு காரணத்துக்காகவே நாட்டை விட்டுத்து துரத்தினங்கள்.' (பக்கம், 212)

பிறிதோரிடத்தில், 'ஷப்படியே கொம்மினிசம் வந்தாலும் சிங்கள கொம்மினிசம் தமிழ் கொமினிசம் என்றுதான் வரும். அப்பவும் சொறிஞ்சு கொண்டு ஏதாவது சொல்லிக்கொண்டுதான்' (பக்கம் 212) என்று அவநம்பிக்கைகளில் வெளிப்படுத்துகிறார்.

யாழ்ப்பாண சமூகம் பற்றிய ஒட்டுமொத்த தன் கருத்தை பின்வருமாறு பதிவு செய்கிறார் செல்வம்,

'நான் சொன்னேன். யாழ்பாணத்தாரும் மோசமானவர்கள்தான். தனிநாடு கேட்கிறது சரிதான். ஆனா தங்கட சனத்தையே சாதி சொல்லிப் பிரிச்சு வச்சுக் கொடுமைகளும் செய்து கொண்டு தங்கட படிபாலையும் வசதிகளாகளையும் இலங்கை முழுவதும் போய் மற்றவர்களையும் சுரண்டுகிறது சரியோ என்று சொன்னேன்.' (பக்கம், 122)

செல்வத்தின் ஆழ்மன நம்பிக்கை தமிழ் இலக்கியம், கிறிஸ்தவ வேதாகம் என்ற இரட்டைத் தண்டவாளங்களில் பயணிக்கின்றது. இதனை உணர்ந்தும் உணராமலும் நேரடியாகவும் மறைமுகமாகவும் பல இடங்களில் சொல்கிறார். ஆத்மாவும் அறிவும் நம்பிக்கையும் ரசனையும் ஒன்றித்துச் செல்வது இதன் தனித்துவம்.

'எங்களுக்கும் எங்கட மதம் தெரியும்; யேசுவையும் தெரியும்.' (பக்கம் 70)

'அன்டைக்கு எனக்குள்ள ஒரு சிறுல மாற்றம் வந்தது உண்மைதான். தமிழிலக்கியம் வாசிக்கிறதோட வேதாக புத்தகத்தையும் வாசிக்கத் தொடங்கினன்.' (பக்கம், 71)

'தமிழும் கடவுளும் எண்ட கோணத்தில் லூக்காஸ் சம்மாட்டி கதைக்கத் தொடங்கி விட்டார்.' (பக்கம் 71)

சங்கப்புலவர்கள், ஓசோ, கண்ணதாசன், பாரதியார், வள்ளுவர் சார்ந்த வாசிப்புகளும் ஜானகிராமன், வரதராசன் மீதான அதிக நேசிப்பும் பல இடங்களில் வாசகர்க்கு வசந்தமாகிறது. புனைவுக்குள்ளே புதுமல்லிகையாய் மணக்கிறது.

இதேபோல் பாரதிராஜவுக்கு முந்திய சினிமா உலகு மற்றும் பாடல்களில் செல்வத்துக்கு உள்ள மயக்கம் பல இடங்களில் அழகாக வெளிக்கிளம்புகிறது.

செல்வத்தின் தனித்துவமான பிரதேசபேச்சுமொழி அலாதியானது; மிக மிக இயல்பானது; நகைச்சுவையும் எள்ளும் இளமைத் துடிப்பு மிக்கன.

லூக்காஸ் சம்மாட்டியுடன் உரையாடும் போது சம்மாட்டி நான் கறுப்பாயிருந்தேன் என்று கூற 'இதைவிட எப்படி கறுப்பாய் இருக்கிறது?' என்கிறார்.

பிறிதோர் இடத்தில் வாடகைக்கார் ஓட்டுபவர், 'பொழுதுபோகாமல் தான் வாசித்த வீரகேசரியை இரண்டாவது தடவையும் வாசித்து (கவனமாக) இரண்டாய் மடித்து வைத்தார்' என்கிறார்.

புனர்ஜென்மம் என்ற அக்கால தமிழ்படம் பற்றி உரையாடும்போது, 'பத்மினி நல்ல வடிவுதானே! அவ சொல்லேக்க சிவாஜி குடிக்காமல் விடலாம் தானே!' என்கிறார். என்ன தத்துவம்? நக்கல்தான்; ஏளனம் தான்.

இன்னும் கால் நூற்றாண்டு கடந்து 2050களில் இந்த நூலை வாசிப்பவர்கள் எம்மவர்களாயிருந்தாலும் கூட நம்ப மாட்டார்கள். இலங்கைத் தமிழர்களது சமூக, அரசியல் வரலாறு இலக்கியவாதிகளால் எழுதப்படுமாயின் இந்த அனுபவப் புனைவு ஒரு தனி அத்தியாயமாக அங்கீகாரம் பெறும் என்பது சர்வ நிச்சயம். ●

# விஷம் நுரைக்கும் கோப்பைகள்

மு. முபாரக்



மனைவிகளின்
காதுகளில் மட்டுமே மிச்சமிருந்த
தங்க தோட்டை விற்ற பணமாக
இருக்கலாம்...

தாங்க முடியாத உடல் வேதனையால்
அறுவை சிகிச்சை செய்வதற்காக
பல நாட்களாய்
அம்மாக்கள் சேர்த்து வைத்திருந்த
பணமாக இருக்கலாம்...

சைக்கிள் வாங்குவதற்காக
பிடித்த சாக்லேட்டை கூட
வாங்கி உண்ணாமல்
சில
குழந்தைகள் சேர்த்து வைத்த
உண்டியல் காசாக கூட இருக்கலாம்...

மகன்களுக்கு
உடல் நலம் சரியில்லை என
பக்கத்து வீட்டுக்காரரிடம்
பொய் சொல்லி வாங்கிய பணமாகவும் இருக்கலாம்...

பல வருடங்களாக
இறந்த அப்பாக்களை நினைவுபடுத்திய
பொருட்களைவிற்ற பணமாக
கூட இருக்கலாம்...

வறுமையால்
முதிர்கன்னியாக இருக்கும்
தன் மகளுக்கு இந்த வருடமாவது
திருமணம்
செய்து வைப்பதற்காக
வீட்டில் யாருக்கும் தெரியாமல் அப்பாக்கள்
விற்ற சிறுநீரகங்களுக்கு கிடைத்த
பணமாக கூட இருக்கலாம்...

இப்போதெல்லாம்
மதுக்கடைகளில் குவிந்து கிடக்கும் பணம்
உழைப்பால் கிடைத்த பணம்
அல்ல... கனவுகளையும்
நினைவுகளையும் சுமந்த மக்களின் சாபங்கள்!

**மு. முபாரக்** <ammubarak2011@gmail.com>

# நாயகன்

## இந்திரா பார்த்தசாரதி

### ஓவியம்: ஃபிரான்ஸ் மார்க்

அது பெரிய காடு. இந்தக் காலத்திய நகரங்களைப் போல் கான்க்ரீட் காடல்ல; மரம், செடி, கொடிகள், தடாகங்களுடன் கூடிய பெரிய காடு. மனிதத் தொந்தரவு ஏதுமில்லாமல், அந்தக் காட்டில் மிருகங்கள் தங்கள் இயல்பான குணங்களுடன் சௌக்கியமாக வாழ்ந்து வந்தன.

ஒரு நாள் சர்க்கஸிலிருந்து தப்பித்து வந்த ஒரு புலி அந்தக் காட்டுக்கு வந்து சேர்ந்தது. மனிதர்களுடன் சில ஆண்டுகள் வசித்ததினாலோ என்னவோ ஜனநாயகக் கொள்கைகளினால் ஈர்க்கப்பட்டு அந்தக் காட்டில் மிருகநாயகம் உருவாக வழிசெய்தால் என்ன என்று அந்தப் புலிக்குத் தோன்றிற்று.

அந்தக் காட்டை ஆண்ட சிங்க ராஜா அப்பொழுது திடீரென்று இறந்தது. சிங்கராஜாவுக்கு வாரிசு ஏதுமில்லை. இத்தகையச் சூழ்நிலையில், இன்னொரு காட்டிலிருந்து ஓர் ஆண் சிங்கக் குட்டியைக் கொண்டு வந்து முடி சூட்டுவது, அந்தக் காட்டின் தொன்று தொட்ட மரபு.

இதைப் பற்றி விவாதிக்க காட்டிலுள்ள அனைத்து விலங்குகளும் கூடின. மனிதர்களுடன் இருந்து திரும்பியதால் அந்தப் புலியைத் தங்களுக்குள் இன்னும் அந்தக் காட்டு மிருகங்கள் சேர்த்துக் கொள்ளாவிட்டாலும், இந்தக் கூட்டத்தில் விசேஷ அழைப்பின் பேரில் அந்தப் புலி கலந்துகொண்டது.

எந்தக் காட்டிலிருந்து ஒரு சிங்கக் குட்டியை எப்படிக் கொண்டுவருவது என்று அந்த விலங்குகள் விவாதித்துக் கொண்டிருக்கும்போது, அந்தப் புலி மிக பவ்யமாக, மிருதுவான குரலில் கேட்டது: "நான் ஒன்று சொல்லலாமா?"

"நம் காட்டுச் சட்டத்தின்படி வெளியாருக்கு நமக்கு ஆலோசனை சொல்ல உரிமையில்லை" என்றது ஆந்தை.



"எப்பொழுது நம்முடன் இருக்க அந்தப் புலியை நாம் அநுமதித்தோமோ, அது நம் கூட்டத்தில் கலந்துகொண்டு தன் கருத்தைச் சொல்வதில் தப்பில்லை. நம் காட்டுச் சட்டத்தை மீறியது ஆகாது" என்றது கரடி. அதுதான் அந்தக் கூட்டத்துக்குத் தலைமை தாங்கியது.

"இது எனக்குச் சரியாகப் படவில்லை" என்றது நரி.

"எது சரியாகப் படவில்லை?" என்று உறுமியது கரடி.

உடனே சமாளித்துக்கொண்டு, "நம் புலியைக் கூட்டத்தில் கலந்துகொள்ளக் கூடாதென்று சட்டத்தைக் காட்டி மிரட்டுவது" என்று தணிந்த குரலில் சொன்னது நரி.

"சரி, உன் யோசனை என்ன" என்று புலியைக் கேட்டது கரடி.

"மனிதர்கள் மாதிரி நாம் மிருகநாயகத் தேர்தல் நடத்தி விடலாமே?" என்றது புலி.

"விளக்கமாகச் சொல்" என்றது காண்டாமிருகம்.

"நாம் இன்னொரு காட்டுக்குச் சென்று ஒரு சிங்கக் குட்டியைக் கொண்டு வர வேண்டுமென்ற அவசியமில்லை. சிங்கந்தான் ராஜாவாக இருக்க வேண்டுமென்ற என்ன அவசியம்? இக்கூட்டத்துக்குத் தலைமை தாங்கும் நீங்கள் இருக்கலாம், காண்டாமிருகம் இருக்கலாம், ஏன் ஒரு மான் கூட இருக்கலாம். இதுதான் மிருகநாயகம். எது எது ராஜாவாக இருக்க விரும்புகின்றதோ அவை அனைத்தும் தம் விருப்பத்தைத் தெரிவிக்கலாம். எதைப் பெரும்பான்மையான மிருகங்கள் தேர்ந்தெடுக்கின்றதோ அதுதான் இந்தக் காட்டின் ராஜா. அது வைதத்துதான் சட்டம். இதுதான் மிருகநாயகம்" என்றது புலி.

"உனக்கு நிற்க உரிமை கிடையாது, நீ வெளியாள்" என்றது ஆந்தை.

"நான் ராஜாவாக விரும்பவில்லை" என்று சிரித்துக்கொண்டே சொன்னது புலி.

கரடி கூறியது: "மனிதர்கள் ஓரினம். அவர்களுக்கு இந்த ஏற்பாடு சாத்தியம். நாம் வெவேறு இனங்கள். கரடி, காண்டாமிருகம், நீர்யானை, யானை, வரிக் குதிரை,



மான் என்று எத்தனை இனங்கள் இருக்கின்றன? அப்பொழுது சிங்கம் ராஜாவாக இருந்ததென்றால், அதனுடைய வலிமையினால் நாம் எல்லோரும் அதைக் கண்டு பயந்தோம்."

புலி சிரித்தது

"எதற்குச் சிரிக்கிறாய்?" என்று கோபமாகக் கேட்டது கரடி.

"மனிதர்கள் ஓரினம் என்று சொன்னீர்களே அதற்காக. அவர்களுக்குள் எத்தனை மதப் பிரிவுகள், எத்தனை ஜாதிப் பிரிவுகள் தெரியுமா? புலிகளுக்கோ, கரடிகளுக்கோ, மான்களுக்கோ மதப் பிரிவு உண்டா, ஜாதிப் பிரிவு உண்டா சொல்லுங்கள்? தேர்தல் என்று சொன்னேனே, அந்தத் தேர்தல் வந்துவிட்டால் போதும், நூறு ஜாதி ஆயிரமாகும், இந்த ஜாதியின் பேரில் எத்தனைக் கொலைகள்! நாம் மனிதர்களைக் காட்டிலும் எவ்வளவோ மேலானவர்கள், கரடியாரே..." என்றது புலி.

"அப்படியானால், நமக்கு எதற்கு அந்தத் தேர்தல்? நம் வழக்கப்படி..."

புலி குறுக்கிட்டது: "தேர்தல் ஒரு நல்ல மரபு. மனிதன் அந்த மரபைக் குட்டிச் சுவராக்கிவிட்டான் என்பதற்காக தேர்தலே வேண்டாம் என்று சொல்லக் கூடாது, கரடியாரே?"

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது.

"இதுதான் நம்முடைய முதல் மிருகநாயகத் தேர்தல். இது எவ்வளவு நல்ல மரபு என்று காட்ட, நாம் எல்லோருமாகச் சேர்ந்து, ஒரு மானை நம் அரசனாகத் தேர்ந்தெடுப்போம்" என்றது புலி.

அத்தனை விலங்குகளும் இதைக் கேட்டுத் திடுக்கிட்டன.

"இந்தக் காட்டில் மான்கள்தாம் பெரும்பான்மையாக இருக்கின்றன. ஒரு மான் தேர்தலில் நின்றால், பெரும்பான்மை பலத்தில் ஜெயித்துவிடும். மேலும், பலஹீனமான ஒன்றை ராஜாவாக ஆக்குவது என்ற ஒரு புது மரபையும் உண்டாக்குவோம்" என்றது புலி.

எதைக் கண்டாலும் மிரட்சி கொள்ளும், வயதான ஒரு ஆண் மானை அரசனாகத் தேர்ந்தெடுத்தன அந்த மிருகங்கள்.

"இந்த மான் எதைக் கண்டாலும், அஞ்சுகிறது, எப்படி அரசாளும் என்று பயப்படாதீர்கள். நான் அதன் அருகில் இருக்குவரை அது எதற்கும் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை, என்னைத் தவிர" என்றது புலி.

"உன்னைத் தவிரவா?" என்று சற்றுத் திடுக்கிட்டுக் கேட்டது கரடி.

"நியாயந்தானே? புலியைக் கண்டு மான் பயப்படாதா? நல்ல வேளை, இந்தக் காட்டில் நான் ஒரு புலிதான் இருக்கிறேன்."

அன்றிரவு, பெண் கரடி ஆண் கரடியைக் கேட்டது: "எல்லாருமாகச் சேர்ந்து ஒரு மானை, அதுவும் வயதான மானை அரசனாகத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்களே, பாவம் அது என்ன செய்யும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?"

"அது ஒன்றும் செய்ய வேண்டாமென்றுதான் எதிர்பார்க்கிறோம்... செத்துப் போன அந்தச் சிங்கம் என்ன பாடுபடுத்திற்று? மிருகநாயகத்தில் இனி அது சாத்தியமில்லை."

மான் அரசருக்கு ஒரு தனிக் குகை ஒதுக்கப்பட்டது. அரசருக்கு வயதாகிவிட்டபடியால், அவருக்குப் பெண் துணை தேவையில்லை என்று புலி தீர்மானித்து விட்டது. அதுவே மான் அரசருக்குப் பாதுகாவலாக அந்தக் குகையில் இருக்கத் தொடங்கியது.

மான் அரசருக்கு உள்ளூரப் பயம். தமக்குத் துணையாக ஒரு புலியா? எந்த நிமிடத்தில் என்ன நடக்கும் என்று யாரால் சொல்ல முடியும்?

"நீங்கள் எதுவுமே சாப்பிடுவதாகத் தெரியவில்லையே. எப்பொழுது என்ன சாப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டது அந்த மான்.

"உங்களுக்குச் சொல்ல மறந்துவிட்டேன், மட்சிமை மிக்க அரசரே! சில ஆண்டுகளுக்கு முன்னால், இமயமலை அருகே ஒரு துறவியைச் சந்தித்தேன். அவர் எனக்கு ஒரு மந்திரம் போதித்தார். அதன்படி ஒரு தடவை அந்த மந்திரத்தை உச்சரித்தால், வருஷத்துக்கொரு தடவைச் சாப்பிட்டால் போதும்."

"அந்த மந்திரத்தை நீங்கள் எப்பொழுது உச்சரித்தீர்கள், கடைசியாக?" என்று நடுங்கிய குரலில்

கேட்டது அந்த மான்.

"ஆறு மாதமாகிறது"

இன்னும் ஆறு மாதத்துக்குத் தனக்குக் கவலை யில்லை. அதற்கப்புறம், வயதாகிவிட்டபடியால், இயற்கை மரணமே வரக் கூடும். வன்முறையில் மரணத்தை வரவேற்க விரும்பவில்லை.

"பயப்படாதே! நான் அந்தத் துறவியைப் பார்த்த பிறகு சுத்த சைவமாகி விட்டேன்.. பழம், காய்கறி வகையறாக்கள்தாம். கொஞ்சம் புல்லும் சாப்பிடுவேன்."

மான் அரசரின் கண்கள் ஆச்சர்யத்தில் மலர்ந்தன.

சில நாட்கள் கழித்து, கரடி ஒரு யானையை அழைத்துக் கொண்டு, புலி இல்லாத சமயமாகப் பார்த்து, மான் அரசரைப் பார்க்க வந்தது.

மான் அரசர் தூங்கிக் கொண்டிருந்தார்.

யானை குரலெழுப்பி பிளிறிற்று.

மான் அரசர் பயத்தில் உடம்பு நடுங்கியவாறே எழுந்து உட்கார்ந்தார்.

"என்ன விஷயம்? என்னையா பார்க்க வந்தீர்கள்?"

"ஆமாம். உங்களைத்தான், அரசரே. உங்களை ஒன்று கேட்க வேண்டும்" என்றது யானை

"கேளுங்கள்."

"காட்டிலுள்ள புல், பழங்கள், தழைகள், தான்யங்கள் ஆகியவை பலஹீனமான ஜீவராசி-களுக்குத்தான் ஒதுக்கப் பாட்டிருக்கின்றன. அவை சாப்பிட்ட பிறகுதான் வலிமையான மிருகங்கள் அவற்றைச் சாப்பிடவேண்டும் என்று உத்தரவு போட்டிருக்கிறீர்களே, இதற்கு என்ன அர்த்தம்? நாங்கள் எல்லாரும் பட்டினி கிடக்க வேண்டுமா? அரசர் ஆணை என்று இனிமேல் பார்க்க முடியாது போலிருக்கிறது" என்றது யானை.

மான் அரசருக்கு ஒன்றும் புரியவில்லை. அப்படி ஓர் ஆணை இட்டதாக அதற்கு நினைவில்லை.

புலி ஒரு தடவை இதைப் பற்றிப் பேசியது அதன் நினைவுக்கு வந்தது. 'இப்படி ஒரு சட்டம் இட்டால், காட்டிலுள்ள பல்ஹீனமான மிருகங்கள் அனைத்தும் உங்களுக்கு வாழ்த்துக் கூறும். மறுபடியும் உங்களையே தேர்ந்தெடுக்கும். வலிமையான மிருகங்களில் பெரும்பான்மையானவை இந்தத் தாவர உணவுகளை சாப்பிட மாட்டா. இந்தச் சட்டத்துக்காக யானைகள் மட்டும் கோபப்படலாம். அந்த விஷயத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்.' இவ்வாறு அப்பொழுது கூறிய புலி, ஆணையையும் அரச ஆணை என்று அறிவித்து விட்டதா?

யானையைப் பார்த்தால் பயமாக இருக்கிறது.

"சரி, நான் புலி வந்தவுடன் கேட்டுச் சொல்கிறேன்" என்றது மான்.

"யார் அரசர், நீங்களா, புலியா?" என்று கேட்டது கரடி.

அப்பொழுது புலி குகைக்குள் நுழைந்தது.

யானை கோபத்துடன் புலியைக் கேட்டது: "இதென்ன புது அரசாணை? எங்களை பட்டினி போடவா?"

"மிருக நாயகத்தில் வல்லான் வகுத்ததுதான் வாய்க்கால் என்று இருக்கக் கூடாது. நீங்கள் கூட்டம் கூட்டமாக மரங்களைச் சாய்த்து தழைகளையும் இலைகளையும் சாப்பிடும்போது, பலஹீனமான மிருகங்கள் என்ன செய்யும் பாவம், அதற்காகத்தான் இந்த அரச ஆணை. கரடியாரே, உமக்கென்ன கவலை. நீங்களும் சைவமாகிவிட்டீர்களா? யானையுடன் நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள்?"

"நியாயம் கேட்க என்னையும் அழைத்துக் கொண்டு வந்தது யானை."

"ஒன்று நினைவில் வைத்துக்கொள்ளுங்கள், கரடியாரே. எப்பொழுது நாம் தேர்தல் மிருக-நாயகத்தைத் தேர்ந்தெடுத்தோமோ, அப்பொழுதே பெரும்பான்மையோரைத்திருப்திப்படுத்துவதுஎப்படி என்று திட்டமிட்டுக் கொண்டே இருக்க வேண்டும். இந்த மான் இன்னும் எத்தனை நாட்கள் இருக்கப் போகிறது? வயதாகிவிட்டது. இல்லாவிட்டாலும் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். அடுத்தத் தேர்தல் கூடிய சீக்கிரத்தில். கரடியாரே, நீங்கள்தான் அடுத்த ராஜா."

"இது நியாயமா? அன்றே சொல்லிற்று நரி. அதை நீ மிரட்டினாய். புலி நம்மை முட்டாளாக்கப் பார்க்கிறது" என்று கோபத்தில் கத்திற்று யானை.

"கரடியாரே, இன்னொரு விஷயம். மனிதர்கள் ஜனநாயகத்துக்கு என்ன இலக்கணம் சொல்லுகிறார்கள் தெரியுமா? மூன்று ஓநாய்களும் ஒரு ஆட்டுக்குட்டியும் மதிய உணவுக்கு என்ன சமைக்கலாமென்று விவாதிப்பதுதான் ஜனநாயகம், புரிகிறதா?" என்று சொல்லிக்கொண்டே மானைப் பார்த்தது புலி.

அந்த வயதிலும் மான் அரசரால் எப்படி அவ்வளவு வேகமாக ஓட முடிந்தது என்று புலிக்குப் புரியவில்லை.

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

